பார்லே

# இப்போது பார்லே பாப்பின்ஸின் ஆனந்தம் பேக்கெட் தீர்ந்து விட்டாலும் தொடரும்



பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பி
பரவசமூட்டும் பரிசுகளைப் பெறுங்கள்.

**இலவசம்** 20 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் குறும்புத்தனமான புதிர் கிட். 10 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் ஃபன் பேட் மற்றும் ஜங்கிள் புக் ஸ்டிக்கர். 4 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் ஜங்கிள் புக் ஸ்டிக்கர்.

* இச்சலுகை இல்லாமலும் பாப்பின்ஸ் கிடைக்கிறது.




இப்போது பழங்களின் புதிய சுவைகளில்

முந்துங்கள்

பரிசுகள் குறைவாக உள்ளன

பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை உங்கள் முகவரி மற்றும் தபால் தலை ஒட்டிய கவருடன் அனுப்ப வேண்டிய முகவரி: பாப்பின்ஸ் பாயின்ட், த.பெ. எண். 907, பம்பாய்-400 057.

பழரசம் அல்லது பல்ப் கிடையாது.
கூடுதல் நறுமணங்கள் சேர்ந்தது.

everest/94/PP/186-tm



# அம்புலிமாமா

மே 1995



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ. 5-00.**

**வருட சந்தா ரூ. 60-00.**




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



## குழந்தைகளின் நலவாழ்வு

உலகக் குழந்தைகள் நிறுவனமாகிய யுனிசெஃப் அண்மையில் நம் நாட்டில் நடத்திய ஆய்வின்படி 44 சதவீதக் குழந்தைகள் சத்துணவு பெறுவதில்லை. சுமார் 19 சதவீதக் குழந்தைகள் இறக்கும் தருவாயில் உள்ளன. நடக்க முடியாமலும், பார்வை இழந்தும் இருக்கும் குழந்தைகள் பல்லாயிரம். இவர்களுக்குப் போதிய சத்துணவு கிடைப்பதில்லை. சுமார் 25 கோடி மக்கள் வறுமையில் உள்ளனர். இது மொத்த மக்கள் தொகையில் 30 சதமாகும்.

இந்த மக்களாலே வறுமையைப் போக்கிக் கொள்ள முடியாது. இவர்களுக்கு அரசாங்க உதவி தேவை. தனிப்பட்ட நிறுவனங்கள் இவர்களுக்கு உதவுகின்றன எனறாலும் அவற்றால் தொடர்ந்து எவ்வளவு பேர்களுக்கு உதவி விட முடியும்? பள்ளிகளில் மதிய உணவுத் திட்டம் அமுலில் உள்ளது என்றாலும் பள்ளிக்குப் போகாத குழந்தைகளின் நிலை என்ன?

இதற்கு ஒரு வழி எல்லக் குழந்தைகளும் கண்டிப்பாகப் பள்ளிக்கு அனுப்பப்பட வேண்டும். அப்போது அவர்களுக்கு அங்கு சத்துணவு கிடைக்கும். இது போதாது. மாலையிலும் மற்ற வேளைகளிலும் இவர்களுக்கு உணவளிக்க இவர்களது பெற்றோர்களுக்கு உணவுப் பொருள்கள் மலிவு விலையில் கிடைக்கச் செய்ய வேண்டும். இவர்களின் பெற்றோர்களும் நோயற்று நலமுடன் இருக்க வழி செய்தால் குழந்தைகளின் வாழ்வும் நலமுடன் இருக்கும்.



மதிமுகம் : 96 மே 1995 புன்னகை : 5

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00



'மெரி'
31 வருட நம்பிக்கை
யின் நிறுவனம்
வழங்கும் எழில்
கொஞ்சும்
ஆபரணங்கள்

கவர்ச்சி ! புதுமை ! நீடித்த உழைப்பு !!! இதுவே 'மெரி' தங்க கவரிங் நகைகளின் சிறப்பு ! உங்களுக்கோ பாதுகாப்பு !! வெள்ளியில் தங்க கவரிங் செய்யப்பட்டு, அமெரிக்க டயமண்ட் (A.D.) பதிக்கப்பட்ட பொன் நிகர் நகைகள். V.P.P. மூலம் நகைளைப் பெற நகைகளின் நம்பர்களைக குறிப்பிட்டு எழுதுங்கள். பரதநாட்டிய செட்டுகளுக்கும் கெம்பு பரதநாட்டிய அணிகலன்களுக்கும் 'மெரி' நகைகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை. இலவச கலர் கேட்லாக் பெற இன்றே எழுதுங்கள் !!

No:191 Rs. 300/50


No:177 Rs. 200/50


No:149 Rs. 200/50


No:42 Rs. 150/50


A. D.
No:836 Rs. 450/50


No:258 Rs. 350/50


No:143 Rs. 200/50


No:157 Rs. 300/50


No:39 Rs. 175/50


No:266 Rs. 600/50


No:952 Rs. 500/50
A. D.


No:86 Rs. 400/50


No:223 Rs. 600/50


No:111 Rs. 200/50


No:876 Rs. 400/50
A, D.


A. D.
No:907 Rs. 300/50


A. D.
No:831 Rs. 500/50


A. D.
No:968 Rs. 700/50


No:74 Rs. 600/50
No:70 Rs. 400/50


No:123 Rs. 200/50


A. D.
No:838 Rs. 450/50


A. D.
No:862 Rs. 700/50


A. D.
No:861 Rs. 700/50

## மெரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால் பெட்டி: 1405, 18, ரங்கநாதன் தெரு, தி.நகர்
சென்னை 600 017. போன்: 444671, 442513

செய்திகளும் தகவல்களும்:

# வறுமையை ஒழிக்கப் போர்!

டென்மார்க் தலைநகரான கோபன் ஹேகனில் மார்ச் 6 முதல் 12 வரை சமுதாய முன்னேற்ற உலக மாநாடுகள் நடைபெற்றன. இதில் கலந்து கொள்ள 185 நாடுகளுக்கு அழைப்புகள் விடப் பட்டன. 121 நாட்டுத் தலைவர்கள் இம் மாநாடுகளில் ஏதாவது ஒன்றில் பங்கு பெற்றார்கள். இது ஒரு பெரிய விஷயம். சுமார் 180 நாடுகளிலிருந்து 6000க்கும் மேற்பட்ட பிரதிநிதிகள் வந்திருந்தனர். இதைவிட இருமடங்கு பல நாட்டு நிறு வனங்களின் பிரதிநிதிகள் வேறு வந்தி ருந்தனர்.

இம்மாநாடுகளில் மக்களின் நலன், முன்னேற்றம் பற்றி விவாதிக்கப்பட்டன. உலக மக்கள் தொகை அதிகமாகி ஏழை களின் எண்ணிக்கை அதிகரித்து விட்டது. இவர்களில் பலருக்கு எழுதப் படிக்கக் கூடத் தெரியாது. பல நாடுகளில் வேலை இல்லாமை என்பது ஒரு பிரச்னையாக உள்ளது. சிலருக்கு அரசாங்க உதவி கிடைக்கிறது. ஆனால் பலரோ அது கிடைக்காமல் அவதிப்படுகிறார்கள். உலக சமாதானத்திற்கும் வறுமை ஒழிப் பிற்கும் தொடர்பு உள்ளதை பல நாட்டுத் தலைவர்கள் ஏற்றுக் கொண்டனர்.

இந்தியப் பிரதமர் இதுபற்றி அங்கு பேசுகையில் "வறுமை இருக்கும் இடத் தில் உலக சமாதானத்தை அங்கு காண முடியாது" எனக் கூறி "சமுதாய, பொருளாதார முன்னேற்றம் கண்டாலே மனித வர்க்கம் உயரும். இதற்கு ஒரே வழி வறுமையை ஒழிப்பதே" எனக் கூறினார்.

உலகத் தலைவர்கள் கூடி இம்மாதிரி விஷயங்களைப் பேசுவது இது முதல் தடவை அல்ல. இதற்கு முன்பெல்லாம் அரசாங்கங்கள் எடுக்க வேண்டிய நட வடிக்கைகள் பற்றியே விவாதித்தார்கள். ஆனால் இந்தக் கோபன்ஹேகன் மாநாடு மக்கள் நலனைப் பேணி அவர்களை உயர்த்த வறுமையை ஒழிப்பதில் மக் களே முயல வேண்டும் என்றும் மக்கள் சக்தியே இதற்குத் தேவை எனவும் பிரகடனப் படுத்தியுள்ளது.

இம்மாநாட்டில் அரசாங்கங்களல் லாது தனிப்பட்ட அமைப்புகள் காட்டிய ஆர்வம் எல்லோரையும் வியக்க வைத் தது. எனவே அடித்தளத்திலிருந்து இப் பிரச்னையை ஆராய்ந்து வறுமையைக் களைய வேண்டும் என அறை கூவி யுள்ளார்கள்.

மனிதர்களை அழிக்கும் மரணாயுதங் களைத் தடை செய்ய வேண்டும் என்றும் இந்த நூற்றாண்டு முடிவதற்குள்ளாவது ஏதாவது செய்து மனிதனின் முன்னேற் றத்திற்கானவற்றைச் செய்ய வேண்டும் என்னும் எண்ணம் எல்லோரிடமும் பரவி யுள்ளது. எல்லோருடைய ஒத்துழைப் புடன் உலகிலுள்ள வறுமையையும் எழுத் தறிவில்லாமையையும் ஒழிக்க முடியும். இதற்கு எல்லா நாடுகளும் ஒத்துழைப் பதே சிறந்த வழி என்று நம் பிரதம மந் திரி திரு. பி.வி. நரசிம்மராவ் கூறினார்.





# கடவுளே வந்தார்!

கரூரிலுள்ள கந்தப்பன் மகாக் கஞ்சன். அவன் தந்தை நோயுற்ற போதிலும் பணம் செலவாகிவிடுமே எனப் பயந்து அவன் வைத்தியம் கூடப் பார்க்கவில்லை. அவர் இறந் தார். அதே கவலையில் அவரது மனைவியும் இறந்து விட்டாள். கந்தப்பனின் மனைவி மக்களோ தம் ஆசைகளை எல்லாம் அடக்கிக் கொண்டு இருந்தனர்.

கந்தசாமியின் எதிரே பழனி யாண்டி என்பவன் வாழ்ந்து வந் தான். அவன் கடவுள் பக்தி மிக்க வன். பிறருக்கு உதவுபவன். பல முறை அவன் கந்தப்பனுக்கு அறி வுரைகள் கூறிப் பார்த்தான். ஆனால் கந்தப்பன் அவற்றைக் காதில் போட் டுக் கொள்ளவே இல்லை. அவன் பணத்தின் மீதே குறியாக இருந்து வந்தான்.

தேவகி கந்தப்பனின் மனைவி. கணவனை தெய்வமாக மதித்து வந் தாள். கணவன் பேச்சை எதிர்த்து ஒரு வார்த்தை கூடச் சொன்னது இல்லை. அவளது இரு மகன்களும் தாயின் பேச்சிற்கும் தந்தை கூறிய தற்கும் கட்டுப்பட்டு நடந்து வந்தார் கள்.

பழனியாண்டி தேவகியிடமும் அவளது மகன்களிடமும் கந்தப்ப னின் போக்கை எதிர்க்கும்படிக் கூறிப் பார்த்தான். ஆனால் அவர்கள் அவ்வாறு நடக்கவில்லை. கந்தப்ப னிடம் கடன் வாங்க வருபவர்களிடம் அவன் அநியாய வட்டி வாங்குவ தாகக் கூறிப் பார்த்தான். அவர்களும் அதுபற்றிக் கவலை கொள்ள வில்லை.

கந்தப்பன் செய்து வரும் அநியா யங்களுக்கு முடிவு கட்ட என்ன வழி என்று யோசித்து முடிவில் கந்தப்பனைக் கொன்று விடுவது

-சிவனார் செல்வன்-

என்ற தீர்மானித்திற்கு வந்தான். இவ்வாறு செய்வதால் தனக்கு ஒரு லாபமும் இல்லாது போனாலும் பிறருக்கு அது நன்மையே என்றும் அதுவும் ஒரு பரோபகாரச் செயலே எனவும் அவன் நினைத்தான்.



பழனியாண்டிக்கு ஒரு பழக்கம் உண்டு. அவன் எந்த வேலையைச் செய்ய நினைத்தாலும் அவ்வூர் கோவிலுக்குப் போய் தெய்வ சன்னிதானத்தில் அமர்ந்து கடவுளது ஆசிகளை வேண்டிவிட்டே அந்த வேலையைத் தொடங்குவான். அதனால் அம்முறையும் அவன் கோவிலுக்குப் போய் தெய்வத்தை வேண்டினான்.

அப்போது கோவிலில் அர்ச்சகர் இருக்கவில்லை. பழனியாண்டி தன் வேண்டுதலை முடித்துவிட்டுக் கண் திறந்து பார்த்த போது தன் எதிரே அழகிய பதினாறு வயது வாலிபன் நிறபதைக் கண்டான். அவனும் "பழனி! வா உன் வீட்டிற்குப் போகலாம்" என்று கூறினான்.

பழனியாண்டியும் "யாரப்பா நீ?" என்று கேட்கவே அவனும் "நான் தான் கடவுள். நீ உன்னால் செய்ய முடியாத ஒரு வேலையைச் செய்ய நினைக்கிறாய். பாவிகள் எனிதில் இறக்க மாட்டார்கள். எனவே உனக்கு உதவ வந்திருக்கிறேன். இப்படிப் பட்டவர்களை எல்லாம் யுக்தியால் மடக்க வேண்டும்" என்றான்.

கந்தப்பனைத் தான் கொல்ல நினைத்தது இவனுக்கு எப்படித் தெரிந்தது என பழனியாண்டி ஆச்சரியப்பட்டான். அதனால் அந்த வாலிபனை அவன் கடவுள் என நம்பினான். அவனும் "பழனி! நான் கடவுள் என்பதைக் கந்தப்பனைத் தவிர வேறு யாரிடமும் கூறாதே" எனக் கூறி அவனோடு அவன் வீட்டிற்குச் சென்றான்.

அன்று விருந்து சாப்பாடு. எனவே பழனியாண்டி சில இனிப்புப் பண்டங்களை எடுத்துக் கொண்டு கந்தப்பனின் வீட்டிற்குப் போய் அவனிடம் கொடுத்தான். கந்தப்பனும் அதில் ஒன்றை எடுத்து விண்டு வாயில் போட்டுக் கொண்டு "ஆகா! ரொம்ப ருசியாக இருக்கிறதே. உன் வீட்டில் என்ன விசேஷம்?"



என்று கேட்டான். பழனியாண்டியும் "என் வீட்டிற்குக் கடவுள் வந்திருக்கிறார். இந்த விஷயத்தை உன்னைத் தவிர வேறு யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று அவர் என்னிடம் கூறினார். எனவே இது ரகசியமாகவே இருக்கட்டும்" என்றான்.

கந்தப்பனும் "அப்படியா! கடவுள் எப்படி இருப்பார் என்று பார்க்க வேண்டுமே. ஒருமுறை என் வீட்டிற்கு அழைத்து வருகிறாயா?" என்று கேட்டான். பழனியாண்டியும் அப்படியே செய்வதாகக் கூறித் தன் வீட்டிற்குப் போய் சற்று நேரத்தில் தன்னோடு வந்த அந்த வாலிபனை அழைத்து வந்தான்.

கந்தப்பன் அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு "நீயா கடவுள்? உனக்குத் தங்க இந்த பழனியாண்டியின் வீடுதானா கிடைத்தது?" என்று கேட்டான். அந்த வாலிபனும் "பழனியாண்டி என் பக்தன். அதனால்தான் அவன் வீட்டில் தங்கி இருக்கிறேன்" என்றான். அப்போது கந்தசாமி "நீ தான் கடவுள் என்று எப்படி நம்புவது?" என்று கேட்டான்.

அந்த வாலிபானும் "நீ எந்தவித பத்திரமும் எழுதி வாங்காமல் பழனியாண்டிக்கு தினமும் ஆயிரம் வராகன்கள் வீதம் தொடர்ந்து பத்து நாட்களுக்குக் கொடு. உன் பணம் நூறு மடங்காகும் பழனியாண்டி அவற்றை எல்லாம் உனக்குத் திருப்பிக் கொடுத்து விடுவான். நீ அவனுக்குப் பத்தாயிரம் வராகன் மட்டும் விட்டு வைத்தால் போதும்" என்றான்.

கந்தப்பனும் "கடன் பத்திரம் எழுதி வாங்காமல் பணம் பழனியாண்டிக்குக் கொடுத்தால் அவன் கடனே வாங்கவில்லை என்று கூறி விடுவானே" எனவே வாலிபனும் "கடவுளாகிய நானே இதற்குச் சாட்சியாக இருக்கும்போது அவன் உன்னை ஏமாற்றிவிட முடியுமா?" என்றான்.

கந்தப்பனோ "நீதான் கடவுள் என்ற நம்பிக்கையே எனக்கு ஏற்படவில்லையே" என்றான். அப்போது அங்கு வேலப்பன் என்பவன் வந்தான். அவன் பத்து ஏக்கர் நிலமும்

பெரிய வீடும் உடையவன். ஆனால் பிறருக்கு உதவி புரிபவனாதலால் அவனிடம் எப்போதும் பணம் இருந்ததில்லை. அவன் வயலில் வேலை செய்யும் பெரியண்ணனின் மகளுக்குத் திருமணம் நடக்க ஏற் பாடாயிற்று. அதற்கு ஒரு நூறு வராகன் தேவைப்பட்டது. அதை கந்தப்பனிடமிருந்து கடனாக வாங்கிச் செல்லவே வேலப்பன் வந்தான்.

முதல் நாளே வேலப்பன் அது பற்றிக் கந்தப்பனிடம் பேசி இருந்த தால் கந்தப்பன் பத்திரம் தயாராக எழுதி வைத்திருந்தான். அப்போது கடவுளாக வந்த வாலிபன் வேலப்ப னிடம் "பார்க்க நீ பரோபகாரியாக இருக்கிறாய். நீ இந்தப் பழனியாண் டிக்கு தினமும் ஆயிரம் வராகன்கள் வீதம் தொடர்ந்து பத்து நாட்களுக்குக் கொடு. அது நூறு மடங்காகி விடும். அதெல்லாம் உனக்கே. ஆனால் அதிலிருந்து பத்தாயிரம் வராகன் களைப் பழனியாண்டிக்குக் கொடுக்க வேண்டும். இதற்குப் பத்திரம் என் றெல்லாம் கிடையாது" என்றான்.

வேலப்பனும் "அப்படியே செய் கிறேன். ஆனால் தினமும் ஆயிரம் வராகன்களுக்கு எங்கே போவேன்?" எனவே அவனும் "ஏன்? இந்தக் கந்தப்பனிடம் கடன் வாங்கு" என் றான். கந்தப்பனோ "நான் பத்திரம் இல்லாமல் கடன் கொடுக்க மாட் டேன். நீ உன் வயலையும் வீட்டை யும் ஜாமீனாக எழுதிக் கொடு. பணம் கொடுக்கிறேன்" என்றான்.

கந்தப்பனுக்கு பத்திரம் எழுதிக்





கொடுத்து வேலப்பன் பத்தாயிரம் வராகன்கள் கடன் வாங்கினான். அதில் ஆயிரம் வராகனை பழனி யாண்டிக்குக் கொடுத்தான். அந்த வாலிபனும் வேலப்பனிடம் "இதை ஊரில் யாவருக்கும் சொல்லுங்கள் ஆயிரம் வராகன்கள் என்ற கணக் கில்லை. ஒரு வராகன் வீதம் பத்து நாட்கள் கொடுத்தாலும் அந்தப் பத்து வராகன் ஆயிரம் மடங்காகும். தொகை அதிகமாக ஆக அதிகப் பணம் கிடைக்கும்" என்றான்.

வேலப்பன் 'சரி'யெனக் கூறிச் சென்றான். கந்தப்பனோ "என்னை இப்படி எல்லாம் ஏமாற்ற முடியாது. நான் நம்பும்படி ஏதாவது செய்து காட்டினாலே உன்னைக் கடவுள் என்று நம்புவேன்" என்றான்.

அப்போது அவன் "என் தசாவ தாரங்களை காட்டுகிறேன் பார்" என்றான். தசாவதாரங்கள் பழனி யாண்டிக்குத் தென்பட்டன. ஆனால் கந்தப்பனுக்குத் தெரியவில்லை. 'எல் லாம் ஏமாற்று வேலை' எனக் கந் தப்பன் கத்தவே பழனியாண்டியும் அந்த வாலிபனும் அங்கிருந்து போய் விட்டார்கள்.

அன்று மாலை கந்தப்பனின் வீட்டின் முன் ஒரே கூட்டம் கூடி விட்டது. எல்லோரும் தம்மிடமுள்ள பொருள்களை அடமானம் வைத்து கந்தப்பனிடமிருந்து பணம் பெற்றுப் பழனியாண்டியிடம் கொடுத்தனர். இதனால் பழனியாண்டியின் வீட்டில் ஒரே பணமாகக் குவிந்து விட்டது.

இதைக் கண்டு பழனியாண்டி பயந்து வாலிபனிடம் "இதென்ன! இவ்வளவு பேர்களும் கந்தப்பனிடம் கடன் வாங்கி அவன் பிடியிலல்லவா அகப்பட்டுக் கொண்டு விட்டார்கள்? கந்தப்பனை ஒழிப்பதற்கு பதில் அவனை மேலும் பணக்காரனாக்கி விடப் பார்க்கிறாயே" என்றான்.

வாலிபனும் "நான் ஒன்றை ஆயிர மாக்கும் திட்டத்தைக் கந்தப்பன் முன் வைத்தேன். ஆனால் அவன்தான் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. ஆனால் இன்னும் ஒன்பது நாட்கள் உள்ளனவே. அதற் குள் அவன் மனம் மாறலாம்" என் றான்.

பத்து நாட்கள் கழிந்தன. வாலிபன் பழனியாண்டியிடம் "இன்னும் சற்று நேரத்தில் எல்லோருடைய பணமும் நூறு மடங்காகி விடும். வாக்களித்த படி எல்லோருக்கும் அவர்களது பணத்தைக் கொடுத்துவிடு. உனக்குக் கிடைத்த பணத்தோடு திருப்தி அடைந்து சுகமாக வாழ்ந்து வா. நான் வந்த வேலை முடிந்தது. அதனால் நான் போய் வருகிறேன்" என்றான்.

பழனியாண்டியும் "சட்டெனப் போய் விடு. சற்று நேரத்தில் மக்கள் கூட்டம் வந்து ஏமாந்தால் உன்னைத் தேடுவார்கள். நீ மட்டும் அவர்களிடம் அகப்பட்டால் உன் மீது கற்களை வீசி அடித்துக் கொன்று விடுவார் கள்" என்றான்.

வாலிபனோ "கவலைப்படாதே. நான் கடவுள். இதோ என் கிருஷ்ணா வதாரம் பார். என்மீது நம்பிக்கை வை" எனக் கிருஷ்ணராகக் காட்சி அளித்து விட்டு மறைந்தான். சற்று நேரத்தில் ஊரார் பழனியாண்டியின் வீட்டிற்கு வந்தார்கள். அவனும் அவர்களுக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்தான். அவர் களும் தாம் கந்தப்பனிடம் வாங்கிய கடனைத் தீர்த்து விட்டு மீதிப் பணத்தோடு மகிழ்ச்சியுடன் அவனை வாழ்த்தியவாறே தம் வீடுகளுக்குச் சென்றார்கள்.

கந்தப்பன் கண்களில் கண்ணீர் வடிந்தது. கடவுள் தனக்கு நல்வழி காட்ட வந்தும் அவரைத் தெரிந்து கொள்ளாமல் விட்டு விட்டேனே என்று மனம் வருந்தினான். இதே கவலையில் அவன் படுத்த படுக்கை யாகக் கிடந்தான். அவனது நோய் குணமடைய மூன்று மாதங்களா யின.

அவனிடம் கடன் வாங்க ஊரார் யாருமே வரவில்லை. இனி அந்த ஊரில் வேலை இல்லையென வேறு ஊருக்குப் போய்விட்டான். அவன் மனம் மாறிவிட்டது அவன் ஏழை எளியவர்களுக்கு உதவி நல்ல விதமாக வாழ்ந்து வரலானான்.



# ஏமாந்தது யார்!

தலைநகரில் இளவரசனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டும் விழா நடக்கவே அதைப் பார்க்கப் பொன்னன், சின்னான் என்ற இருவர் தம் ஊரிலிருந்து கிளம்பினார்கள். அவர்கள் அப்பாவிகள். அதனால் அவ்வூரார் "தலைநகரில் ஏமாற்றுப் பேர்வழிகள் இருப்பார்கள். எச்சரிக்கையாக இருங்கள்" என்று கூறி அனுப்பினார்கள்.

இருவரும் தலைநகரில் பல மாளிகைகளைப் பார்த்தவாறே ராணியின் அரண்மனை முன் நின்றனர். அதிலுள்ள ஜன்னல்களை ஒன்று இரண்டு மூன்று என்று எண்ணிக் கொண்டிருந்தான் பொன்னன்.

அப்போது ஒரு கடா மீசைக்காரன் வந்து அவனிடம் "எவ்வளவு எண்ணி னாய்?" என்று கேட்டான். பொன்னனும் பயந்தவாறே 'பத்து', என்றான். "அப்படியானால் கொடு பத்து ரூபாய்" என மீசைக்காரன் அதட்டிக் கேட்கவே பொன்னன் பத்து ரூபாயை எடுத்துக் கொடுத்தான்.

மீசைக்காரன் பணத்தை வாங்கிக் கொண்டு போனபின் பொன்னன் சின்னானிடம் "மீசைக்காரன் நன்றாக ஏமாந்தான். நான் இருபது வரை எண்ணி விட்டேன். ஆனால் பத்து வரை என்று கூறி அவனை ஏமாற்றி விட்டேன். நமக்குப் பத்து ரூபாய் லாபம்" என்றான்!





# புவனசுந்தரி

## 7

*(ட்ராய் நகரை கிரேக்கர்கள் ஒன்பது ஆண்டுகளாக முற்றுகை இட்டனர். இக்காலத்தில் அவர்களிடையே சச்சரவுகள் மூண்டன. வஜ்ஜிரகாயன் போரிலிருந்து விலகி நிற்கவே ட்ரோஜன்கள் உற்சாகம் கொண்டு கிரேக்கர்களைக் கடுமையாகத் தாக்கினார்கள். ஒரு கிரேக்கக் கப்பலுக்குத் தீ மூட்டினார்கள். இதையெல்லாம் கண்டு வஜ்ஜிரகாயன் மீண்டும் போர்க்களத்திற்கு வந்தான். ட்ரோஜன் வீரர்களில் சிறந்த வீரசிம்மனை அவன் கொன்றான். புவனசுந்தரியைக் கவர்ந்து சென்ற மோகனன் வஜ்ஜிரகாயனை சூரிய தேவனின் ஆலயத்தில் கொன்றான். அதன் பிறகு—)*

**வ**ஜ்ஜிரகாயன் இறந்தபின் அவன் நினைவாகப் பந்தயங்கள் நடந்தன. ஓட்டப்பந்தயத்தில் தேவமயனும் சக்கரம் சுழற்றி எறிவதில் பூதவனும் முதலாவதாக வந்தார்கள். வஜ்ஜிரகாயனின் தாய் அவனது ஆயுதங்களை சிறந்த கிரேக்க வீரனுக்குக் கொடுத்து விடுவதாக அறிவித்தாள். வஜ்ஜிரகாயனின் உடலை பத்திரமாகக் கொண்டு வந்ததால் தாமே அவற்றை அடையத் தகுதி பெற்றவர்கள் என்று ரூபதரனும் பூதவனும் உரிமை கொண்டாடினார்கள். வேறு யாரும் அவற்றைப் பெற முன் வரவில்லை.

அந்த இருவரில் யார் சிறந்தவன் என்று ராஜராஜனால் தீர்மானிக்க முடியவில்லை. அதனால் வயதில் முதிர்ந்தவரும் அறிவாளியுமான நவத்யோதனிடம் தீர்ப்புக் கூறுமாறு

விட்டு விட்டார்கள். அவரும் "நம் பலம் பற்றி நம்மைவிட நம் எதிரிகள் நன்கு அறிவார்கள். எனவே அவர்கள் இந்த இருவரைப்பற்றி என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று அறிய நம் ஒற்றர்களை இரவில் கோட்டை மதில் பக்கம் அனுப்பு" என்றார். ராஜராஜனும் அதன்படியே தன் ஒற்றர்களை அனுப்பினான்.

ஒற்றர்கள் இரவில் கோட்டைக்கு வெளிப்புறம் நின்று கோட்டைக்குள் மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று ஒட்டுக் கேட்கலானார்கள். அப்போது சில இளம் பெண்கள் பேசிக் கொண்டிருந்தது அவர்களுக்குக் கேட்டது. அவர்கள் வஜ்ஜிரகாயனின் உடலை எடுத்துச் சென்றவர்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஒருத்தி "நம் வீரர்கள் அம்பு மழையாகப் பொழிந்தும் அதைச் சற்றும் லட்சியம் செய்யாமல் வஜ்ஜிரகாயனின் உடலை பூதவன் எப்படித் தூக்கிக் கொண்டு போனான் பார்த்தீர்களா? அவனல்லவாவீரன்!" என்று கூறினாள்.

உடனே மற்றொருத்தி "உடலை ஒரு அடிமையின் முதுகில் ஏற்றிச் சுமந்து கொண்டு போகச் சொன்னால் அவன் கூட அதனை எடுத்துச் செல்வான். ஆனால் அதனை மற்றவர்கள் தாக்காமல் தடுத்து பத்திரமாகக் கொண்டு சேர்க்க வழி செய்த அந்த ரூபதரனே பூதவனைக் காட்டிலும் சிறந்த வீரன்" என்றாள். மற்ற



பெண்களும் அவள் கூறுவதே சரி என்றனர்.

ஒற்றர்கள் அவர்கள் பேசியதைக் கேட்டுவிட்டு ராஜராஜனிடம் போய்த் தாம் கேட்டதை அப்படியே சொன்னார்கள். ராஜராஜனும் வஜ்ஜிரகாயனின் ஆயுதங்களை ரூபதரன் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று தீர்ப்பளித்தான்.

இது பூதவனுக்குப் பெருத்த அவமானமாகப்பட்டது. பூதவன் கோபம் கொண்டதால் தன் அறிவையே இழந்து விட்டான். கிரேக்கர்கள் ட்ராய் நகரைக் கொள்ளை அடித்து ஓட்டி வந்த ஆடு மாடுகள் எல்லாம் ஒரே இடத்தில்தான் கட்டப்பட்டிருந்தன. பூதவன் வெறிப் பிடித்தவன் போல அந்த இடத்திற்குச் சென்றான். அவன் அவற்றை வெட்டிக் கொல்ல ஆரம்பித்தான். ஒரு வெள்ளை நிற ஆட்டைப் பிடித்து "இது ராஜராஜன்" என்று கூறி அதனை ஆத்திரத்துடன் வெட்டினான். இன்னொரு ஆட்டைப் பிடித்து "இது பிரதாபன்" என்று கூறி வெட்டித் தள்ளினான்.

இன்னொரு ஆட்டைப் பிடித்து ஒரு கம்பத்தோடு இறுகக் கட்டி "இதுதான் ரூபதரன்" என்று கூறிச் சவுக்கால் பளீர் பளீரென்று அடித்தான் இதற்குச் சற்று நேரத்திற்குப் பிறகே அவனது வெறி அடங்கியது. பிறகு அவன் கடற்கரைக்குப் போய் கத்தியால் தன்னைக் குத்திக் கொண்டு இறந்து விழுந்தான்.

பூதவன் மரணம் வீரமரணம் அல்ல என்று கூறி அவனது உட






லைப் புதைக்கத்தான் வேண்டும் என்று பிரதாபன் சொல்லிவிட்டான். ஆனால் ரூபதரன் குறுக்கிட்டு பூதவனுக்கு ஒரு வீரனுக்கு உரிய மரியாதையைக் காட்ட வேண்டும் என்று கூறி அவனது ஈமச் சடங்குகளைச் செய்ய ஏற்பாடு செய்தான்.

வஜ்ஜிரகாயன் இறந்ததால் கிரேக்கர்கள் உற்சாகம் இழந்தனர். ஆரூடம் சொல்லும் காஞ்சுகன் "லெம்நாஸ் தீவை ஆளும் தனதவனிடம் தேவர்களின் வில்லும் அம்புகளும் உள்ளன. அவற்றைக் கொண்டு வந்தால்தால் ட்ராய்நகரை வெல்ல முடியும்" என்று கூறினான்.

அவற்றைக் கொண்டுவர ராஜராஜன் ரூபதரனையும் தேவமயனையும் ஒரு கப்பலில் அனுப்பினான். லெம்நாஸ் தீவு கிரேக்கர்களின் படை இருந்த இடத்திலிருந்து சுமார் நாற்பது மைல் தொலைவில் இருந்தது. கிரேக்க வீரர்கள் இருவரும் அத்தீவை அடைந்தபோது தனதவன் ராஜ பிளவையால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தான்.

ரூபதரன் தன் சாமர்த்தியங்களை எல்லாம் காட்டி அவனிடமுள்ள வில்லையும் அம்புகளையும் வாங்கிச் செல்ல முயன்றான். ஆனால் முடியவில்லை. தனதவன் கனவில் தேவதைகள் தோன்றி "நீ ட்ராய் நகருக்குப் போ. உனக்கு பெயரும் புகழும் நன்மையும் உண்டாகும். நீயும் வஜ்ஜிரகாயனின் மகன் நவயோதனும் சேர்ந்து ட்ராய் நகரை வீழ்த்தப் போகிறீர்கள். உங்கள் இருவரில் ஒருவர் இல்லாவிட்டாலும் ட்ராய் நகரம் வீழ்ச்சியுராது" என்றன. அதன்படியே தனதவன் தன்னிடமுள்ள வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு கிரேக்க வீரர்களுடன் ட்ராய் நகருக்குச் சென்றான். கிரேக்க முகாமில் வைத்தியர்கள் இருந்தார்கள். அவர்கள் தனதவனைக் குளிப்பாட்டி நன்கு தூங்க வைத்து ராஜபிளவைக்கு அறுவை சிகிச்சை அளித்தார்கள். விரைவிலேயே தனதவனும் குணமடைந்தான்.

அவன் உடனேயே போர்க்களத்திற்குப் போய் மோகனனைப் போருக்கு அழைத்தான். அவன் எய்த

முதலாவது அம்பு மோகனனின் மீது படவில்லை. ஆனால் இரண்டாவது அம்பு அவனது இடது கையில் பட்டது அக்கையில்தான் மோகனன் வில்லைப் பிடித்துக் கொண்டிருந்தான். மூன்றாவது அம்பு அவனது வலது கண்ணில் பாய்ந்து விட்டது. நான்காவது அம்பை தனதவன் எய்து மோகனனின் காலில் பலமாக அடித்தான்.

மோகனன் நொண்டிக் கொண்டே தப்பிக் கோட்டைக்குள் சென்றான். அவனுக்கு சிகிச்சை அளிக்க ஐடா மலையிலிருந்து மூலிகைகள் கூடக் கொண்டு வரப்பட்டன. ஆனாலும் மோகனனைக் காப்பாற்ற முடியவில்லை. அவன் இறந்து போனான்.

மோகனன் இறந்ததும் அவனது சகோதரர்களான சந்திரனும் அரிபயங்கரனும் புவனசுந்தரி இனித்தன் மனைவியே என்று சச்சரவிடலானார்கள். அரிபயங்கரன் போரில் தன் திறமையை நன்கு வெளிப்படுத்தினான் எனக் கூறி வர்த்தனன் அவனுக்கு ஆதரவு அளித்தான். ஆனால் புவனசுந்தரி தான் ஸ்பார்ட்டாவின் ராணி என்பதனையும் பிரதாபனின் மனைவி என்பதனையும் மறந்துவிடவில்லை.

அவள் கிரேக்கர்களிடம் சென்றுவிட ஒரு நாளிரவு கோட்டை மதில் மீதேறித் தப்ப முயன்றாள். அதைக் கண்ட ஒரு காவலாளி அவளைப் பிடித்து அரண்மனைக்குக் கொண்டு சென்றான். அவள் அரிபயங்கரனுக்கு பலவந்தமாக விவாகம் செய்து





இடத்திற்குப் பத்திரமாகக் கொண்டு போய் விட்டால் நான் ட்ராய் நகர இரகசியங்களைக் கூறுகிறேன்" என்றான்.

ரூபதரன் மகிழ்ந்து போய் இணங்கவே சந்திரனும் "வரும் கோடையில் ட்ராய் நகரம் வீழ்ச்சி அடையப் போகிறது. ஆனால் அதற்குள் மூன்று வேலைகள் நடந்தாக வேண்டும் ஸீஸாவில் ருத்ரமுகனின் எலும்பு உள்ளது. அது உங்கள் முகாமை அடைய வேண்டும். இரண்டாவது நவயோதன் போர்க்களத்திற்கு வர வேண்டும். மூன்றாவது அறிவு தேவனின் விக்கிரகத்தைக் கோட்டைக்குள்ளிருந்து கவர்ந்து வரவேண்டும்" எனக் கூறினான்.

வைக்கப்பட்டாள்.

சந்திரன் விரக்தி அடைந்து ஜடா மலைச் சிகரத்திற்குப் போய் வாழலானான். அவனை எப்படியாவது பிடித்து வந்தால் ட்ராய் நகர ரகசியங்களைத் தெரிந்து கொள்ளலாம் என்று காஞ்சுகன் ராஜ ராஜனிடம் கூறினான். அவனும் ரூபதரனிடம் கூறி சந்திரனைப் பிடித்து வரச் சொன்னான். ரூபதரனும் அவனைப் பிடிக்கச் சென்றான்.

சந்திரனோ "நான் பாணங்களுக்கு பயந்து ஓடி வரவில்லை. இங்கு மோகனன் வஜ்ஜிரகாயனை அக்கிரமமாகக் கொன்றான். அது என் மனதிற்கு மிகுந்த வேதனை அளித்து வருகிறது. என்னை அமைதியான

இந்த ரகசியங்கள் தெரிந்ததும் ராஜராஜன் ருத்ரமுகனின் எலும்புகளைக் கொண்டு வர சிலரை ஸீஸாவிற்கு அனுப்பினான். வஜ்ஜிரகாயனின் மகன் நவயோதன் பனிரெண்டு வயது ஆனவன். அவனை அழைத்து வர ரூபதரனும் ரக்தவர்ணனும் தேவமயனும் கப்பலில் அனுப்பப்பட்டனர். நவயோதன் வந்து போர்க்களத்தில் கால் வைத்ததும் இறந்து போன வஜ்ஜிரகாயனின் உருவதம் தென்பட்டது. ரூபதரன் வஜ்ஜிரகாயனின் ஆயுதங்களை அச்சிறுவனிடம் கொடுத்தான். அதை அணிந்த நவயோதன் தன் தந்தையைப் போலவே வீராவேசத்துடன் போர் புரிந்தான்.

அறிவு தேவன் விக்கிரகத்தைக்

கவர்ந்து வர ரூபதரனும் தேவமயனும் முன் வந்தார்கள். ரூபதரன் தன் மீது ரத்தத்தை வாரி இறைத்துக் கொண்டு ட்ராய் நகரில் தஞ்சம் அடைபவன் போலக் கோட்டைக்குள் சென்றான். அவனை புவனசுந்தரி ஒருத்தியால்தான் அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது. அவன் ஏன் இந்தக் கோலத்தில் வந்தான் என அறிய அவள் முயன்றாள். ஆனால் அவன் எவ்வித பதிலும் கூறவில்லை.

அவள் அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துப்போய் குளிப்பாட்டி உணவளித்து "நான் இங்கு சிறையில் அடைபட்டுள்ளது போல இருக்கிறேன். நான் என் நாட்டிற்குப் போக விரும்புகிறேன். உன் திட்டம் என்ன?" என்று கேட்டாள்.

இதே சமயம் வர்த்தனின் மனைவி அங்கு வந்தாள். அது கண்டு ரூபதரன் நடுநடுங்கி அவளது கால்களில் விழுந்து தன்னைக் காப்பாற்றும்படி வேண்டினான். அவளும் அவனுக்கு அடைக்கலம் அளித்து அவன் பத்திரமாகத் திரும்பிப் போகவும் உதவி புரிந்தாள்.

அவன் அங்கிருந்து போகும் போது அறிவு தேவனின் சிலையைக் கவர்ந்து கொண்டுதான் சென்றான். கோட்டைக்கு அப்பாலிருந்த தேவமயனிடம் அதைக் கொடுத்தான். இருவரும் அதனோடு அங்கிருந்து வேக வேகமாக கிரேக்க முகாமை நோக்கி நடந்தனர்.

வழியில் ரூபதரனின் மனதில் தானே அந்த விக்கிரகத்தைக் கொண்டு வந்ததாகப் பெயர் பெற ஆசை எழுந்தது. அதனால் ஒரு அடி பின்னால் போய் தேவமயனைக் கொல்லக் கத்தியை எடுத்தான். ஆனால் தேவமயன் சட்டெனத் திரும்பிப் பார்த்து ரூபதரனின் கையிலிருந்த கத்தியைத் தட்டி விட்டான். பிறகு ரூபதரனை அவன் அடித்து உதைத்து இழுத்துக் கொண்டு தன் முகாமிற்குச் சென்றான்.

(தொடரும்)



# அம்புலிமாமா செய்திகள்

## மூன்றே மூன்று பேர்!

பிப்ரவரி-மார்ச்சில் அருணாசலப் பிரதேச சட்டப் பேரவைக்குத் தேர்தல் நடந்தது. காமேங் மாவட்டத்தில் திரிசேனா பிராகாம்ஸ் தொகுதியில் சக்கு என்ற கிராமம் உள்ளது. காடுகளிடையே மூன்று நாள் பயணம் செய்தாலே இந்த ஊரை அடைய முடியும். தேர்தல் அதிகாரிகள் வாக்குப் பெட்டிகள், ஓட்டுச் சீட்டுகள், மார்க் இங்க் முதலியவற்றோடு வந்து தேர்தல் மையத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். இவ்வளவுக்கும் அந்த ஊரில் இருந்தது மூன்றே வாக்காளர்களே. ஜனநாயகத்திற்கு நம் நாடு முக்கியத்துவம் அளிக்கிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு.

## விமானி ஓட்டி இல்லாத விமானம்

பிப்ரவரி 26ல் அமெரிக்காவில் ஹாவர்டிலிருந்து ஒரு ஜெப்ளின் விமானம் கிளம்பி 70 மீட்டர் உயரம் சென்றதும் அதன் விமான ஓட்டி திடீரென ஏற்பட்ட மாரடைப்பால் அதில் இறந்து விட்டார். ஆனால் விமானம் நிற்காமல் 3000 மீட்டர் உயரத்திற்குப் போய் இரண்டு மணி நேரம் பயணம் செய்து வட கலிபோர்னியாவில் மனிதர்களே



இல்லாத இடத்தில் தரை இறங்கியது. எங்கே தம் வீடுகளின் மீது விழுந்து விடுமோ என்ற பயந்த அப்பகுதிவாசிகள் விமானம் மனிதர்களே இல்லாத இடத்தில் இறங்கியது கண்டு மகிழ்ந்தனர்.

## முகவரி இல்லாத பூனை!

பங்களாதேஷில் சாந்த்பூரிலிருந்து தலைநகருக்கு உள்ள தூரம் 6.5 கி.மீ. ஒரு பூனை தபால் பையில் கடிதங்களோடு சேர்ந்து சென்றது.



அதன் கழுத்தில் அதன் முகவரி கொண்ட சீட்டு கட்டப்பட்டிருக்கவில்லை. தபால் பை அஞ்சலகத்தில் திறக்கப்பட்டுக், கடிதங்கள் கொட்டப்பட்ட போது அதிலிருந்த பூனை மியாவ் என்று கத்திக் கொண்டு வெளியே குதித்தது. அந்தப் பையை ரயிலுக்குள் தூக்கிப் போட்ட போதும் ரயிலிலிருந்து வெளியே எடுத்துப் போட்ட போதும் உள்ளே இருந்த பூனை கத்தவே இல்லை. ஆனால் பைக்குள் பூனை எப்படிச் சென்றது என்பது அதிகாரிகளுக்குப் புதிராக உள்ளது.

## தூயதான விதம்!

அண்டார்டிகா என்றாலே வெள்ளைப் பனிக் கட்டியே நம் கண்முன் தோன்றும். அங்குள்ள மெக்மர்டோ ஸ்டேஷன் என்ற சிற்றூரின் மக்கள் தொகை கோடை காலத்தில் 1200. குளிர் காலத்தில் 200. இவர்கள் ஊருக்கு வெளியே குப்பை கூளங்களைப் பள்ளங்களில் போட்டு எரிப்பார்கள். சாப்பிட்டு மீதமாவதை இப்பள்ளங்களில் எறிவார்கள். இவற்றைத் தின்ன கடல் காகங்கள் போன்ற பறவைகள் அவற்றைக் கொத்தி சுற்றுப்புறத்தை மாசுபடுத்தும். அங்குள்ளவர்களுக்கு தூய்மை பற்றி எடுத்து கூறியபின் இப்போது அவர்கள் தம் சுற்றுப்புறத்தைத் தூயதாக வைத்து வருகிறார்கள்.




# நிபந்தனைகள் ஏன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ இந்த பயங்கர இரவில் இப்படி விடா முயற்சி செய்வதைப் பார்த்தால் எனக்கு நீ அளவுக்கு மீறிப் போகிறாயோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. முடிவில் இதனால் எந்தப் பயனும் இராதும் போய் விடலாம். அதிர்ஷ்டம் ஒருவன் பக்கம் இருந்தால் அவன் எப்படியோ உயர்ந்து விடுவான். அவனது தகுதி, திறமை பற்றி எல்லாம் கவலை இல்லை. இதனை விளக்க சூரியப்பிரபா என்ற அரசகுமாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாக கேள்!" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



என்று கேட்டான். அவள் தன் தந்தையிடம் "அப்பா! என்னை சதுரங்கத்தில் தோற்கடிக்கும் அரசகுமாரனையே நான் மணந்து கொள்வேன். என்னுடன் விளையாடும் அரசகுமாரன் முதல் தடவை தோற்றால் அவன் நூறு சவுக்கடிகள் பெற வேண்டும். இரண்டாவது தடவையில் தோற்றால் அவன் தான் திருமணம் செய்து கொள்ள மாட்டான் என்று தன் குல தெய்வத்தின் மீது ஆணை இட வேண்டும். மூன்றாவது தடவையில் தோற்றால் அவன் தூக்கு தண்டனை ஏற்க வேண்டும். இவை என் நிபந்தனைகள் என அறிவியுங்கள்" என்றாள்.

இந்த விசித்திர நிபந்தனைகளைக் கேட்டு மணிவர்மன் திகைத்துப் போனாலும் தன் மகளின் விருப்பப்படியே அவற்றை நாடு முழுவதிலும் பறை சாற்றுவித்தான். சில அரசகுமாரர்கள் பேரழகி சூரியப்பிரபாவை மணக்க ஆசைப்பட்டு சதுரங்கம் ஆட வந்தார்கள். ஆனால் முதலாவது முறையிலேயே அவர்கள் தோற்றுப் போய் நூறு சவுக்கடிகள் பெற்றுத் திரும்பிச் சென்றார்கள்.

இப்படி அவமானப்பட்ட அரசகுமாரர்கள் யாருமே அவளுடன் இரண்டாவது தடவை சதுரங்கம் ஆட வரவில்லை. இதைக் கண்ட மணிவர்மன் இனித் தன் மகளின் திருமணம் எப்படித்தான் நடக்கப் போகிறதோ என்று கவலைப்

மரகதபுரி மன்னன் மணிவர்மன் அவனது மகள் சூரியப்பிரபா. அவள் மிகவும் அழகானவள். சதுரங்க விளையாட்டில் அவளை மிஞ்சுபவர் யாருமே இல்லை எனலாம். மணிவர்மனும் சதுரங்கம் விளையாடுவதில் மிகுந்த ஈடுபாடு உடையவன். எனவே அவன் தன் மகளுக்கு அவ்விளையாட்டைக் கற்க ஊக்கமளித்து வந்தான்.

சூரியப்பிரபா தக்க வயதை அடைந்து திருமணமாகும் நிலைக்கு வந்தபோது மணிவர்மன் "மகளே! நீ இப்போது விவாக வயதை அடைந்து விட்டாய். உனக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணுகிறேன். உன் அபிப்ராயம் என்ன?"

படலானான். முதலாவது முறையில் ஜெயிக்க முடியவில்லை என்றதும் தளர்ந்து போய் எந்த அரசுகுமாரனும் இரண்டாவது தடவையில் ஆடத் துணியாதது வேறு அவனுக்குத் தன் மகளுக்குத் திருமணம் நடக்குமா என்ற நம்பிக்கையையே அழித்து விட்டது.

இந்த விசித்திர நிபந்தனைகளை அமரபுரி மன்னன் அமரேந்திரன் கேட்டான். அவன் திருமணம் ஆகாத வன். அவன் சூரியப்பிரபாவின அழகைப் பற்றிப் பலர் கூறக் கேட்டிருந்தான்.

அவனுக்கு அதுவரை சதுரங்கம் எப்படி விளையாடுவது என்று கூடத் தெரியாமல் இருந்தது. ஆனால் சூரியப்பிரபாவுடன் ஆடி அவளை மணந்து கொண்டுவிட வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் அவ்விளையாட்டைக் கற்கலானான். அவன் சதுரங்கப் போட்டிகள் பலவற்றை நடத்தி அவற்றின் சூட்சுமங்களைத் தெரிந்து கொண்டான். சதுரங்க விளையாட்டில் நிபுணன் எனக் கருதப்பட்ட தேவநாரயணனிடம் ஆறு மாதம் முனைந்து கற்றான்.

தான் சதுரங்கம் நன்கு ஆடக் கூடியவன் என்ற நம்பிக்கை அவனுக்கு வந்துவிட்டது. அதன் பிறகு ஒரு நாள் அவன் அமரபுரியிலிருந்து கிளம்பி மரகதபுரிக்குப் போனான். தான் சூரியப்பிரபாவுடன் சதுரங்கம் விளையாட வந்திருப்பதாக அவன் தெரிவித்தான்.

மணிவர்மனும் உடனே போட்டிக்





கான ஏற்பாடுகளைச் செய்தான். பலர் முன்னிலையில் அமரேந்திரன் சூரியப்பிரபாவுடன் சதுரங்கம் விளையாடினான். சூரியப்பிரபாவின் ஆட்டத்திற்கு முன் அமரேந்திரன் நிற்க முடியவில்லை. அவனது காய்களை வெட்டி 'ராஜா'வைக் கட்டிப் போட்டு விட்டாள். சூரியப்பிரபா வெற்றி பெற்றாள். எல்லோரும் கைதட்டி அவளை பாராட்டினார்கள்.

நிபந்தனைப்படி அமரேந்திரன் சவுக்கடி வாங்கிக் கொள்ளத் தயாரானான். இரு வீரர்கள் சவுக்குகளை எடுத்து வந்தார்கள். சூரியப்பிரபா அமரேந்திரன் நிலைக்குப் பரிதாபப் பட்டாள். அடி வாங்கிய அமரேந்திரன் மற்ற அரசகுமாரர்களைப் போலத் தன் நாட்டிற்கு போய் விடுவான் என அவள் எதிர்பார்த்தாள். ஆனால் தன் நாட்டிற்குத் திரும்பிச் செல்லாமல் இரண்டாவது தடவை சதுரங்கம் ஆடப்போவதாக அவன் கூறியது கேட்டு ஆச்சரியப்பட்டாள்.

மரகதபுரி மந்திரி அவனிடம் "எம் இளவரசியின் இரண்டாவது நிபந்தனை தெரியுமல்லவா?" என்று கேட்கவே அமரேந்திரனும் "ஓ! நன்றாகத் தெரியும். இந்த நிபந்தனை இல்லாமல் போனாலும் நான் வேறு யாரையும் மணக்க மாட்டேன். நான் மணந்தால் சூரியப்பிரபாவைத்தான் மணப்பேன்" என்று கூறினான்.

இதற்குப் பின் இரண்டாவது தடவை போட்டி ஆரம்பமாகியது. அமரேந்திரன் நன்கு விளையாடினான் என்றாலும் சூரியப்பிரபாவின் கையே ஓங்கி நின்றது. ஆயினும் அமரேந்திரன் கவனமாக விளையாடியதால் முன் போல சூரியப் பிரபாவால் அவனது 'காய்'களை எளிதில் வெட்ட முடியவில்லை.

அமரேந்திரன் சூரியப்பிரபாவைத் திக்குமுக்காடச் செய்து விட்டதாக எண்ணி ஒரு நிமிடம் தன் கவனத்தை ஆட்டத்தில் செலுத்தாமல் இருந்து விட்டான். ஆட்டத்தில் ஒரு காயை நகர்த்துவதற்கு பதிலாகத் தவறுதலாக வேறொரு காயை நகர்த்தி விட்டான். அவ்வளவுதான்! சூர்யப்பிரபா மறு நிமிடமே அவனது காய்களை வெட்டி 'ராஜா'வைக் கட்டிப் போட்டு

விட்டாள். நிபந்தனைப்படி அமரேந்திரன் தான் எந்தப் பெண்ணையும் மணக்கப் போவதில்லை என்று தன் குலதெய்வத்தின் பேரில் ஆணையிட்டுக் கூறினான்.

இனியாவது அவன் தன் நாட்டிற்குப் போய் விடுவான் என்று சூரியப்பிரபா எதிர்பார்த்தாள். ஆனால் அவன் மூன்றாவது தடவையும் சூரியப்பிரபாவுடன் சதுரங்கம் ஆடப் போவதாக அறிவித்தது கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். மன்னன் மணிவர்மன் அவன்முன் வந்து அவனைத் தட்டிக் கொடுத்து "போதும். இனியும் விளையாட வேண்டாம். அதில் தோற்றால் உன் உயிரையே -இழக்க வேண்டுமே. எனவே உன் நாட்டிற்குப் போய் நன்கு ஆட்சி புரி" என்றான்.

அமரேந்திரனோ "தங்களது அறிவுரைக்கு மிக்க நன்றி. ஆனால் வெற்றி தோல்வி அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது தானே. இம்முறையும் ஆடிப் பார்க்கிறேன்" என்றான். இதைக் கேட்ட சூரியப்பிரபா ஆச்சரியப்பட்டாள். தன் உயிரையும் பொருட்படுத்தாமல் மூன்றாவது தடவையும் விளையாட வந்தது அவளைத் திகைக்க வைத்தது. அவள் தன் தந்தையிடம் "அப்பா! இதில் நான் தோற்று விட்டதாக ஒப்புக் கொள்கிறேன்" எனக் கூறி வெட்கத்தோடு தலை குனிந்து நின்றாள்.

இதைக் கேட்டு அங்கிருந்தவர்கள் எல்லோரும் இளவரசி கூறியதைக் கேட்டு ஆச்சரியமும் திகைப்பும்



அடைந்தனர். மன்னன் மணிவர்மன் மட்டும் தன் மகளிடம் "நீ சரியான சமயத்தில் சரியான முடிவை எடுத்தாய்" என்று கூறி பாராட்டினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! அமரேந்திரன் முதலில் சூரியப்பிரபாவுடன் சதுரங்கம் ஆடிய போதே அவள் அதில் கெட்டிக்காரி என்று அறிந்திருப்பானே அப்படி இருக்க ஏன் இரண்டாவது தடவை ஆடினான்? ஆனால் அதிலும் தோற்று மூன்றாவது தடவை அவன் ஆட வந்த போது சூரியப்பிரபா அவன் மீது இரக்கப்பட்டுத்தானே தான் தோற்று விட்டதாகக் கூறினாள்? மணிவர்மனும் தன் மகளின் முடிவு சரியான சமயத்தில் சரியாகவே எடுக்கப்பட்டது எனக் கூறினான். இது சரியா? என் இந்த சந்தேகங்களுக்கு விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்" என்றது.

விக்கிரமனும் "தான் சூரியப்பிரபாவிற்கு சதுரங்கத்தில் இணையாக முடியாது என அமரேந்திரன் அறிந்திருந்தாலும் மூன்று முறைகளிலும் ஆட முன் வந்தது அவன் சூரியப்பிரபாவின் மீது எவ்வளவு ஆசை கொண்டிருந்தான் என்பதனையே காட்டுகிறது. இதை சூரியப்பிரபா தெரிந்து கொண்டு விட்டாள். சதுரங்கப் போட்டி அவள் தனக்கு ஏற்ற கணவனைத் தேர்ந்தெடுக்க அவள் கையாண்ட வழி. யாருக்குத் தன் மீது அளவற்ற அசைக்க முடியாத ஆசை உள்ளதெனக் காண மூன்று தடவைகளுக்கான நிபந்தனைகளை அறிவித்தாள். அமரேந்திரன் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் அவளை அடையவே முயன்றான். இதைத்தான் தன் மகள் எதிர்பார்த்தாள் என அறிந்த மன்னனும் அவள் முடிவு சரியெனக் கூறினான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.





# அவன் சாமர்த்தியம்!

வேப்பூர் வெங்குசாமியின் மகன் மருது. எட்டு வயதான அவனை அவனது பெற்றோர்கள் செல்லமாக வளர்த்து வந்தார்கள். பையன் கெட்டிக்காரன், துடியானவன் என்றெல்லாம் அவர்களது உறவினர்கள் கூறிப் பாராட்டினார்கள்.

ஒருமுறை மருதுவின் மாமா அவன் வீட்டிற்கு வந்தார். அவர் மருதுவின் புத்திசாலித்தனத்தைக் கண்டு மெச்சி "இதோ பார் மருது! இப்போது ஒரு வெள்ளி நாணயத்தையும் ஒரு செப்புக் காசையும் உன் முன் வைக்கிறேன். நீ எதை எடுத்துக் கொள்வாய்?" என்று கேட்டார். மருதுவும் சட்டென செப்பு நாணயத்தை எடுத்துக் கொண்டு "இதைத்தான்" என்றான்.

இதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். எல்லோரும் மருது வெள்ளி நாணயத்தைதான் எடுப்பான் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் மருது செப்புக் காசை எடுத்தது அவர்களுக்கு ஏமாற்றமாக இருந்தது. மருது பெரிய மக்கு என்று எல்லோரும் பேசலாயினர்.

இந்த சம்பவம் அந்த ஊரில் எல்லோருக்கும் தெரிந்து விட்டது. அது முதல் மருதுவைச் சீண்டி வேடிக்கை பார்க்க தினமும் பலர் ஒரு கையில் வெள்ளி நாணயத்தையும் மற்றொரு கையில் செப்பு நாணயத்தையும் வைத்துக் கொண்டு மருதுவைக் கூப்பிட்டு "இவற்றில் உனக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக் கொள்" எனக் கூறவும் மருதுவும் செப்பு நாணயத்தையே எடுத்துக் கொள்ளலானான். அதைக் கண்டு சுற்றிலும் நின்றவர்கள் சிரிக்கலாயினர்.

முன்பு வந்த மருதுவின் மாமா மறுபடியும் மருதுவின் வீட்டிற்கு

-கி. அருணா-

வந்தார். மருது இதற்குள் வெள்ளி நாணயத்தின் மதிப்பை அறிந்திருப் பான் என நினைத்தார். ஆனால் ஊரில் எல்லோருமே மருதுவைப் பற்றி ஏளனமாகப் பேசுவது கண்டு மனம் புழுங்கினார்.

அவர் அம்முறையும் ஒரு வெள்ளி நாணயத்தையும் ஒரு செப்புக் காசை யும் மருதுவின் முன் வைத்து "இதில் உனக்கு வேண்டியதை எடுத்துக் கொள்" என்றார். அம்முறையும் அவன் செப்பு நாணயத்தையே எடுத்துக் கொண்டான்.

அதைக் கண்ட அவனது மாமா தலையில் அடித்துக் கொண்டு "நீ இன்னமும் மக்காகவே இருக்கி றாயே. உனக்கு வெள்ளி நாணயம் செப்பு நாணயத்தை விடப் பன் மடங்கு மதிப்பானது என்பது இன்ன மும் தெரியவில்லையா?" என்று வருத்தப்பட்டவாறே கேட்டார்.

மருதுவும் "தெரியும் மாமா" என்று கூறியவாறே ஒரு பெரிய டப்பாவைக் கொண்டு வந்து திறந்து காட்டினான். அதில் ஒரே செப்பு நாணயங்களாக இருந்தன. அப்போது மருது "நான் மட்டும் முதல் தடவையில் வெள்ளி நாணயத்தை எடுத்திருந்தால் அது ஒன்றுதான் எனக்குக் கிடைத்திருக் கும். நான் அப்போது செப்பு நாண யத்தை எடுத்ததால் அந்த சமாசாரம் ஊர் முழுவதும் பரவி என்னை எல் லோரும் கேலி செய்ய ஒரு வெள்ளி நாணயத்தையும் ஒரு செப்பு நாணயத் தையும் காட்டி அவற்றில் ஒன்றை எடுத்துக் கொள்ளச் சொல்லி வரலா னார்கள். நானும் செப்பு நாணயத் தையே எடுத்து இவ்வளவு சேர்த்தி ருக்கிறேன். எல்லோரையும் போல வெள்ளி நாணயம் அதிக மதிப்புள் ளது என நினைத்து அதை எடுத்தி ருந்தால் என்னை கேலி செய்வது நின்று போயிருக்கும். என்னிடமும் இவ்வளவு செப்பு நாணயங்கள் சேர்ந்திருக்காது" என்றான்.

அவனது மாமாவும் "சபாஷ்! நீ மக்கு இல்லை. மிகவும் சாமர்த்திய சாலியே" என்று பாராட்டினார்.





நம் நாட்டுக் கோட்டைகள்-3

# ராஜபுத்திரர்களின் கோட்டைகள்-1

சித்திராங்கதமோரி ஏழாவது நூற்றாண்டில் சித்திரகூடம் என்ற கோட்டையைக் கட்டினான்.

இதற்கு நூறாண்டுகளுக்குப் பின் புகழ்பெற்ற குஹால் தலைவனான பப்பாராவல் அதற்குச் சித்தூர் எனப் பெயரிட்டு அதைத் தன் உறைவிடமாக ஆக்கிக் கொண்டான்.

அவனது வம்சத்தவர்களான சசோதியர்கள் சித்தூரை சுமார் எண்ணூறு ஆண்டுகள் ஆண்டனர். கோட்டை முன் இன்றும் உள்ள 'விஜயஸ்தம்பம்' (வெற்றித் தூண்) 1458ல் கும்பராணாவால் மால்வா சுல்தானை வென்றதன் நினைவுச் சின்னமாகக் கட்டப்பட்டதாகும். ஒன்பது அடுக்கு மாடிகள் கொண்ட இந்தத் தூணின் உயரம் 36 மீட்டர் இதைக் கட்ட சுமார் பத்தாண்டுகள் ஆயின.

சித்தூர் கோட்டையின் பரப்பளவு நம் நாட்டுக் கோட்டைகள் எல்லாவற்றிலும் அதிகமானது. இக்கோட்டைக்குள் குடிப்பதற்கும், விவசாயத்திற்கும் பயன்படும் பல கிணறுகள் வெட்டப்பட்டுள்ளன. இவற்றால் இரண்டு மாத முற்றுகையைக் கூடத் தாங்கக் கூடியது இக்கோட்டை.

1567ல் அக்பர் தலைமையில் முகலாயப் படைகள் சித்தூர் கோட்டையை முற்றுகையிட்டன. ராஜா ராணா உதய சிம்மன்

'சபாத்' பாதுகாப்பின் போது சித்தூர் கோட்டைக்குள் நெருங்கிப் போகும் முகலாயப் படை.

கோட்டையைக் காக்க ஜெயமல்லனையும் பட்டா என்பவனையும் நியமித்துவிட்டு அரவல்லிப் பகுதிக்குச் சென்றான்.

ஜெயமல்லனின் தலைமையில் கோட்டையைக் காக்க அவனது வீரர்கள் வீராவேசத்துடன் போராடினார்கள். முகலாயப் படை முன்னேற முடியவில்லை. நான்கு மாதங்களுக்குப் பின் ஜெயமல்லன் திடீரென ஒரு பீரங்கி குண்டால் தாக்கப்பட்டு காயமுற்றான். அதனால் அவன் மரணம் அடையவே ராஜபுத்திரப் படைகள் தோற்க, முகலாயப் படை வெற்றி பெற்றது.



ராம்பால்வாசல், சித்தூர்கட்

கோட்டையை இழந்தும் ராணா உதயசிம்மன் மனம் தளர்ந்து போய் விடவில்லை. அவனது மகன் பிரதாப்பும் அக்கோட்டையை மீட்கும் வரை சுக வாழ்வு வாழ்வதில்லை என்று சபதம் செய்தான். இப்படிச் சபதம் செய்தவர்களில் லோஹார்கள் எனப்படும் கருமான்கள் சித்தூர்க் கோட்டை மீட்கப்படும் வரை தாம் பள்ளத்தாக்குகளில் வாழ்வதாகச் சபதம் பூண்டனர். அன்று முதல் அவர்கள் அலைந்து திரிந்து வாழ்க்கை நடத்தி வரலானார்கள். அவர்களை 'கடியா லோஹார்' என்கிறார்கள். 1955ல் முறைப்படி கோட்டைக்குள் அழைத்துச் செல்லும் வரை அதாவது சுமார் 400 ஆண்டுகள் தங்கள் சபதத்தைக் காத்து வந்தார்கள்.

உதயப்பூரருகே கும்பல்கட்டை 1485ல் கும்பராணா கட்டினார். மிகப் பெரிய இக் கோட்டையின் சுற்று மதில் பல மலைகளின் மீது போகிறது. ஏழு மீட்டர் அகலமுள்ள



கும்பல்கட் மதில் சுவர்

இந்த மதில் சுவரின் மீது எட்டு குதிரை வீரர்கள் ஒரே வரிசையில் அகல வாக்கில் செல்ல முடியும். இக்கோட்டை பல முற்றுகைகளை எதிர் கொண்டது. ஆனால் அக்பரால் ஒருமுறைதான் இதைக் கைப் பற்ற முடிந்தது. அதுகூட சிறிது காலத் திற்கே அவர் வசம் இருந் தது.

ராணா தம்போர் கோட்டை 1192ல் கட்டப்பட்டது. இதுகூட அதற்குமுன் அப்பகுதியிலுள்ள ஏழு மலைகளைச் சேர்த்துக் கட்டப்பட்டதாகும். பரத் பூர், ஆக்ரா, ஜெயபூர், சித்தூர், குவாலியர்



ராணா தம்போர் (இடதுபுறம்)க்கு வெளியே தாற்காலிகமாக நிறுவப்பட்ட கோட்டையிலிருந்து குண்டுகளால் தாக்கும் முகலாயப் படை வீரர்கள் (வலதுபுறம்)

கோட்டைகளுக்கு சம தூரத்தில் மையமான இடத்தில் இக்கோட்டை கட்டப்பட்டது. மலைகளிடையே அடர்ந்த காடுகள் சூழ்ந்துள்ள இக்கோட்டை ஆக்கிரமிப்பாளர்களைத் தடுக்க உதவி வந்தது.

1209-1569க்கு இடைப்பட்ட காலத்தில் இதன் மீது 13 முறைகள் படை எடுப்புகள் நடந்தன. ஹம்மீர் தேவாவின் காலத்தில் கலகம் செய்த அல்லா உத்தீன் கில்ஜியின் படைத் தலைவன் ஒருவன் இக்கோட்டையுள் சரண் புகுந்தான். அப்போது கில்ஜியின் படைகள் இக்கோட்டையை முற்றுகை இட்டுக் கொண்டிருந்தன. ஆனால் இதனைக் கைப்பற்ற முடியாமல் ஓடிப் போய் விட்டன.

1301ல் நடந்த முற்றுகைக்கு அல்லாவுத்தீன் கில்ஜியே தலைமை தாங்கினான். அப்போது ஹம்மீரின் இரு அமைச்சர்கள் துரோகம் புரிந்தனர். அதனால் கோட்டை வீழ்ச்சியுற ஹம்மீர் மரணமடைந்தான். அவனது படைத் தலைவனும் மாவீரனுமான மகம்மது ஷாவை எதிரிகள் பிடித்துக் கொன்று விட்டார்கள்.

1569ல் அக்பர் இக்கோட்டையை முற்றுகையிட்டார். கோட்டை மதிலைத் தகர்க்க 200 எருதுகள் பூட்டிய வண்டிகளின் மீது மிகப் பெரிய பீரங்கியை வைத்துக் கொண்டு வந்தார். ஆயினும் அவரால் கோட்டையைப் பிடிக்க முடியவில்லை. முற்றுகை சிறிது காலம் நடந்தது. முடிவில் அக்பர் மன்னர் பகவான்தாஸை ராணா தம்போர் மன்னர் ராவ் அர்ஜுன் ஹாடாவிடம் சமாதான தூது அனுப்பினார். சமாதான உடன்படிக்கை ஏற்பட்டு அப்பகுதியில் அமைதி நிலவியது. இக்கோட்டையைச் சுற்றியுள்ள காட்டுப் பகுதி இப்போது புலிகளின் சரணாலயமாக உள்ளது.



மார்வாரின் தலைநகர் மாண்டோர். 15வது நூற்றாண்டில் ராதோட் மன்னன் ராவ் ஜோதா தலைநகரை அங்கிருந்து 9 கி.மீ. தூரத்திலுள்ள மலைமீது மாற்ற எண்ணினான். அவன் தன் பெயரில் ஜோத்பூர் என்ற நகரை ஏற்படுத்தி 1459ல் மெஹ்ரான்கட் என்ற கோட்டையை நிர்மாணித்தான்.

இக்கோட்டை முகலாயர்கள் ஆப்கானியர்கள் தாக்குதல்களோடு சுற்றுப்புற மன்னர்களின் தாக்குதல்களுக்கும் இலக்காகியது.

இக்கோட்டைக்குள் இப்போது கீல்கிலா, சம்புபான், காஜிகான் என்னும் பெரும் பீரங்கிகள் நல்ல நிலையில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.



மெக்ரான்கட், ஜோத்பூர்

 



# சிரிப்புகூட மருந்தா!

அய்யாசாமிக்குப் பணம் அதிகம் இல்லாது போனாலும் தற்பெருமையும் வாய்த் துடுக்கும் மிக அதிகம். அவனது உறவினர்கள் அவனுக்கு உதவி வந்ததால் அவன் தன்னை ஒரு 'ராஜா' என்றே நினைத்துக் கொண்டு விட்டான். அதனால் யாரிடமும் கண்டபடி பேசிக் கெட்ட பெயரும் வாங்கினான்.

அவனது மைத்துனன் மயில்சாமி எவ்வளவு கூறியும் அவன் துடுக்காக பேசுவதை விட்டு விடவில்லை. ஒருநாள் அய்யாசாமி கிணற்றடியே வழுக்கி விழுந்து விட்டான். அதனால் அவன் கால் சுளுக்கிக் கொண்டது. அவன் விழுந்ததைக் கண்டு அவன் மனைவி சிரித்து விட்டாள்.

அய்யாசாமியோ கோபத்துடன் "கணவனை தெய்வமாக மனைவி கருதும் இந்நாட்டில் நீ என்னைப் பார்த்து சிரிக்கிறாயே. நான் கீழே விழுந்ததைப் பார்த்துக் கொண்டே இருந்தாயா? விழுவதற்கு முன் என்னை தாங்கிப் பிடிக்க நீ ஓடி வந்திருக்கக் கூடாது? இதுவா நீ உன் கணவனுக்குக் காட்டும் மரியாதை?" என்று சீறினான்.

அப்போது அவன் மைத்துனன் மயில்சாமி அவனிடம் வந்து "நீ நடப்பதைப் பார்த்தால் யார்தான் சிரிக்க மாட்டார்கள்? நீ சாய்ந்து சாய்ந்து நொண்டி நொண்டி நடப்பது எனக்குக் கூடத்தான் சிரிப்பை மூட்டுகிறது" என்றான். அதுகேட்டு அய்யாசாமி "ஓ! நீயும் நின்றா வேடிக்கைப் பார்த்தாய்? நான் விழு முன் நீயாவது ஓடி வந்து என்னைத் தாங்கிப் பிடித்திருக்கக் கூடாதா? மரம் மாதிரியா நின்றாய்?" என்று பொரிந்து தள்ளினான். மயில்சாமி சிரித்துக் கொண்டே அங்கிருந்து போய் விட்டான்.

-வேங்கட. கிருஷ்ணன்-



வீட்டிற்குப் போய்ப் பிச்சை கேட்டுப் பார்த்தால் என் கஷ்டம் உங்களுக்குப் புரியும்" என்று கூறிவிட்டுப் போகலானான்.

அய்யாசாமி ஆத்திரத்துடன் "என்னையா பிச்சை எடுக்கச் சொல்கிறாய்?" என்று அடிக்க வாசலுக்கு நொண்டி நொண்டி வந்தான். அப்போது வாசலில் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள் அவர்களைக் கண்டாலே அய்யாசாமிக்குப் பிடிக்காது. சில சமயங்களில் அவர்களது கோலி குண்டுகளையோ கில்லிகளை எடுத்து வைத்துக் கொண்டு தரவும் மாட்டான். அதனால் சிறுவர்களுக்கும் அவனைக் கண்டாலே எரிச்சல்.

அய்யாசாமி வீட்டிற்குள் நொண்டிக் கொண்டே போய் வாசல் கதவைத் திறந்து வீதியைப் பார்த்தான். அப்போது ஒரு பிச்சைக்காரன் நொண்டிக் கொண்டே வந்து "ஐயா! காலில்லாதவன். ஓடியாடி வேலை செய்ய முடியாத நிலையில் இருக்கிறேன் ஏதாவது பிச்சை போடுங்கள்" என்று பிச்சை கேட்டான்.

அய்யாசாமியும் "நானும்தான் நொண்டிக் கொண்டிருக்கிறேன். உன்போலப் பிச்சையா கேட்கிறேன்?" என்று சீறினான். பிச்சைக்காரனோ "நீங்கள் வசதியுள்ளவர். பிச்சை எடுக்க வேண்டாம். என் நிலை அப்படி இல்லையே. நீங்களும் என் நிலையில் இருந்து நாலு

அய்யாசாமி நொண்டி நடப்பது கண்டு அவர்கள் அவனை கேலி செய்ய எண்ணினார்கள். ஒருவன் பார்வையற்றவன் இப்படித்தான் நடப்பான் என்று கண்ணை மூடிக் கொண்டு நடந்து காட்டினான். இன்னொருவன் காது கேளாதவன் போலக் காதருகே கையை வைத்துக் கொண்டு கேட்க முயல்பவன் போல நடித்தான். இன்னொருவன் ஊமை போல 'பே பே' என்று கூவி நடித்தான். கடைசியில் ஒருவன் நொண்டி நடந்து "நீங்கள் நடித்தது போல யார் யார் இருக்கிறார்களென்று சொல்ல முடியாது. ஆனால் இப்படி நொண்டி நொண்டி நடப்பவர் பெயர் மட்டும் எனக்குத் தெரியும்

அதுதான் அய்யாசாமி" என்றான்.

அது கேட்டு சிறுவர்கள் கை தட்டிச் சிரித்தார்கள். அய்யாசாமியோ அவர்களை திட்டித் துரத்தினான். அப்போது அங்கு ஒருவன் வந்தான். அய்யாசாமி அவனை முன்பின் பார்த்ததில்லை. அவனோ "நான் முருகப்பர் வயலில் வேலை செய்பவன் அய்யாசாமியிடம் ஒரு விஷயம் கூற வந்திருக்கிறேன்" என்றான்.

அய்யாசாமியும் "நான்தான் அய்யாசாமி என்ன விஷயம்? சட்டென்று சொல்லித் தொலை. கேட்கிறேன்" என்று சீறி விழுந்தான். அவனோ "நான் நம்ப மாட்டேன். நீங்கள் ஒரு முறை நடந்து காட்டுங்கள். ஏனென்றால் சில சிறுவர்கள் அய்யாசாமி நொண்டி நொண்டி நடப்பார். என்றார்கள். எனக்கு நீங்கள்தான் அய்யாசாமி என்று உறுதிப்பட்ட பிறகே அதைச் சொல்வேன்" என்றான்.

அய்யாசாமியோ "ஓ! நான் உனக்கு நடந்து காட்ட வேண்டுமோ?" என்று கூறி அவனைக் கண்டபடி திட்டினான். அப்போது அந்த ஆள் "நீங்கள் தான் அய்யாசாமி. இப்படி எல்லாம் திட்டக்கூடியவர் இந்த ஊரில் நீங்கள் ஒருவர்தாம் என்று என் எஜமானர் கூறி இருக்கிறார். உங்களைத் தென்னந்தோப்பு புது வீட்டிற்கு எங்கள் எஜமானர் வரச் சொன்னார்" என்றார்.

அதைக் கேட்ட அய்யாசாமிக்குக் கோபம் வந்தாலும் அதை அடக்கிக் கொண்டான். முருகப்பர் வரச்





திட்டி விரட்டவே அவனும் "நானாக எதையும் சொல்லவில்லையே. இந்த ஊரில் உள்ளதைத் தானே சொன்னேன்" என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

அய்யாசாமி முருகப்பரை மிகவும் மதிப்பவன். அதனால் அவரைக் காணத் தென்னந்தோப்பு புது வீட்டிற்குச் சென்றான். அங்கு வாசலில் நின்றிருந்த வேலப்பர் அய்யாசாமியைக் கண்டதும் "வா. வா. உனக்காகத்தான் காத்திருந்தேன். என் சிற்றப்பாவின் பேத்தி சிவகாமி. நன்றாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த அவள் இப்போது சிரிக்காமல் எதையோ பறிகொடுத்தவள் போல வெறித்து வெறித்துப் பார்க்கிறாள். இவள் முன் போலக் கலகலவென்று ஒருமுறை சிரித்து விட்டால் குணமடைந்து விடுவாள் என்று வைத்தியார்கள் கூறுகிறார்கள். இவளைச் சிரிக்க வைக்க எவ்வளவோ முயன்றும் எங்களால் முடியவில்லை. அதற்காகத்தான் உன்னை வரச் சொன்னேன்" என்றார்.

அய்யாசாமியும் "இதற்கு நான் என்ன செய்ய முடியும்?" நான் ஒன்றும் வைத்தியர் இல்லையே. முதலில் சொல்லி இருந்தால் என் கூடவே வைத்தியரையும் அழைத்துக் கொண்டு வந்திருப்பேனே. இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

சொல்லி இருப்பதால் அவரைக் காண வேண்டும் என்று எண்ணி வந்தவனிடம் "தென்னந் தோப்பு புது வீடா? அது எங்கே?" என்று அய்யாசாமி கேட்கவே அவனும் "இங்கிருந்து போனதும் முதல் தெருவில் நாய் அய்யாசாமி இருக்கிறார். அவரது வீட்டைத் தாண்டி வலது புறச் சந்தில் போனால் எருமை அய்யாசாமி வீடு வரும். அந்த வீட்டைத் தாண்டி இடது புறம் திரும்பினால் மொண்டிக்காளை அய்யாசாமி வீடு வரும். அதற்கு நேர் எதிரில் தான் தென்னந்தோப்பு புது வீடு உள்ளது" என்றான்.

அய்யாசாமி மேலும் அவனைத்

வேலப்பரும் "உன்னால் முடியும். நீ இப்போதெல்லாம் நடப்பது வேடிக்கையாக உள்ளது என்று ஊரே பேசிக் கொள்கிறது. ஒரு முறை நீ சிவகாமியின் முன் நடந்தால் போதும் அவள் சிரிக்கத் தொடங்கி விடுவாள்" என்றார்.

அய்யாசாமியின் ஆத்திரம் பொங்கியது. அவன் வேலப்பரை வாய்க்கு வந்தபடி திட்டிவிட்டு சிவகாமியைப் பார்த்து "ஓகோ! நான் நடப்பதைப் பார்த்து விட்டு நீ சிரிக்க வேண்டுமா? நீ எதற்காக இங்கே வந்தாய்? ஒழிந்து போ. என் கண்முன் ஏன் நிற்கிறாய்?" என்று என்னென்னவோ வசை பாடி விட்டு அங்கிருந்து கிளம்பலானான்.

அவன் திட்டியது சிவகாமிக்கு வேடிக்கையாக இருந்தது. அவன் நொண்டி நொண்டி நடந்ததோ அவளுக்கு அடக்கமுடியாத சிரிப்பை அளித்தது. அவன் நடக்கும் விதத்தைக் கண்டு சிவகாமி பலமாகச் சிரித்தாள். நெடுநேரம் சிரித்ததால் அவள் குணமடைந்து விட்டாள். எப்போதும் போலப் பேசி சிரித்துப் பழகலானாள். அது கண்டு அய்யாசாமி பேயறைந்தவன் போலானான். எல்லோரும் சிவகாமி குணமடைந்ததற்காக அய்யாசாமியைப் பாராட்டினார்கள்.

அய்யாசாமியோ "நான் நொண்டி நடப்பதை ஏன் கேலி செய்கிறீர்கள்? இவளது நோய் போக அதுதானே காரணமாக இருந்தது?" என்று கேட்டான். வேலப்பரும் "உன் பேச்சும் நீ நடப்பதும் யாருக்குத் தான் சிரிப்பை மூட்டாது? அதனால் சிவகாமி சிரித்ததில் ஆச்சரியமே இல்லை" என்றார்.

தான் திட்டுவதைக் கேட்டு எல்லோரும் சிரிப்பதையும் தான் நடப்பது எல்லோருக்கும் வேடிக்கையாக இருப்பதையும் அறிந்த அய்யாசாமி வெட்கித் தலை குனிந்தான். அதன்பின் யாரையும் திட்டாமல் அமைதியாக சாந்தமாய்ப் பேசி வந்தான்.





# இரு கேள்விகள் எதற்கு?

ராயவரம் ஜமீன்தாரர் ராமப்பர் மிகவும் தயாள குணம் படைத்தவர். அவர் ராயவரத்தில் பல மருத்துவ மனைகளைக் கட்டி நோயாளிகள் தங்கி சிகிச்சை பெற வசதிகளையும் செய்து கொடுத்தார். இதனால் அந்த ஜமீனின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் சிகிச்சை பெற மக்கள் ராயவரத்திற்கு வந்து கொண்டிருந்தார்கள்.

இந்த மருத்துவமனைகளைத் திறம்பட நடத்தி நிர்வகித்து வந்தவர் நீலகண்டய்யா என்ற வயதான அனுபவம் மிகுந்த மருத்துவர். அவர் திடீரென இறந்து விடவே ராமப்பர் யாரை நீலகண்டய்யாவின் இடத்தில் முக்கிய மருத்துவராக நியமிப்பது எனக் கவலைப்பட்டார்.

அவர் தன் நண்பனான சுந்தர சேனரிடம் அதுபற்றிக் கூறவே சுந்தர சேனரும் "நீலகண்டய்யாவிடம் உதவி மருத்துவர்களாகப் பணிபுரிந்தவர்கள் நால்வர். அவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கலாம். அவர்களை நாளைக்கு உங்களைப் பார்க்க வரச் சொல்கிறேன். நீங்கள் பரீட்சித்துப் பாருங்கள்" என்றார். ராமப்பரும் அதற்கு இணங்கினார்.

நீலகண்டய்யாவின் நான்கு உதவியாளர்களுக்கும் மறுநாள் காலை ஒன்பது மணிக்கு ஜமின்தாரரைக் காண வரவேண்டும் எனத் தகவல் அனுப்பப்பட்டது. அதன்படி அவர்களும் மறுநாள் காலை ஒன்பது மணிக்கு ஜமீன்தாரரின் மாளிகைக்குச் சென்றனர்.

அங்கிருந்த வேலையாள் அவர்களை மரியாதையுடன் வரவேற்று வசதியாக உட்கார வைத்து "ஜமீன்தாரர் அவசரமான ஒரு வேலையில் இருக்கிறார் இன்னும் சற்று நேரத்தில் வந்து உங்களைப் பார்ப்பார்" என்று கூறிவிட்டுப் போனான்.

-சுவா. வெங்கடராமன்-

மணி பத்து, பதினொன்று என்று போய்க் கொண்டே இருந்தது. இன்னும் வரவில்லையே என்று அவர்களில் மூவர் வேலையாளிடம் "எஜமானர் வர நேரமாகுமோ?" என்று சலித்துக் கொண்டே கேட்டார்கள். அவன் பதில் எதுவும் கூறவில்லை. அவர்களைக் காண பனிரெண்டு மணிக்குத்தான் ஜமீன்தாரர் சந்திர சேனருடன் வந்தார். மருத்துவம் பற்றி அறியாத அவர்கள் தங்களிடம் என்ன கேட்கப் போகிறார்கள் என்று அவர்கள் அலட்சியமாக இருந்தார்கள்.

அப்போது ஒரு வேலையாள் பாதி நீருள்ள ஒரு கண்ணாடிக் கூஜாவைக் கொண்டு வந்து அங்கிருந்த மேஜை மீது வைத்தான். வேலையாள் அங்கிருந்து போன பின் சந்திரசேனர் அவர்களிடம் "நீங்கள் ஒவ்வொருவராக நான் கேட்கும் மூன்று கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டும்" என்றார். பிறகு அவர் முதலில் ஜயந்தன் என்பவனைக் கூப்பிட்டு "இந்தக் கூஜாவைப் பற்றி ஒரு வாக்கியம் கூறு பார்க்கலாம்" என்றார்.

அவனும் முகத்தைச் சுளித்தவாறே அதில் பாதி பாகத்திற்கு நீர் உள்ளது என்றான். அடுத்து சந்திர சேனர் எதிரேயுள்ள இலை உதிர்ந்த ஒரு மரத்தைக்காட்டி "அந்த மரம் பற்றி ஒரு வாக்கியம் கூறு"என்றார். அவன் சலித்தவாறே "அது இலை



உதிர்ந்த மரம்" என்றான்.

சந்திரசேனன் "சரி. நான் உன்னை ஏன் அந்த இரண்டு கேள்விகளைக் கேட்டேன் என்று சொல் பார்க்கலாம்" என்று கேட்டார். அதற்கு அவன் பதில் சொல்ல முடியாமல் தடுமாறி ஏதோ சொன்னான். சந்திரசேனர் அவனை அனுப்பி விட்டு அடுத்து நரேந்திரன் என்பவனையும் மோகன் என்பவனையும் தனித்தனியாக அதே கேள்விகளைக் கேட்டார். அவர்களும் ஜெயந்தன் கூறியது போலவே பதிலளித்தார்கள். அவர்களை அடுத்து பசுபதி என்பவன் வந்தான்.

அவன் முதல் கேள்விக்கு "பாதி நீருள்ள இந்தக் கூஜாவை முழுவதும் நீருள்ளதாகச் செய்யலாம்" என்றான்.

சந்திரசேனரின் இரண்டாவது கேள்விக்கு "இலையுதிர் காலத்தில் மொட்டையாக உள்ள இந்த மரம் வசந்த காலத்தில் துளிர்க்கும்" என்றான். அதுகேட்டு சந்திரசேனர் "என் மூன்றாவது கேள்விக்கான பதிலை உன் நண்பர்களும் கேட்க உரக்கச் சொல்" என்றார்.

அவனும் "மருத்துவர் நோயாளியின் மனம் அறிந்து சிகிச்சை அளிக்க வேண்டும். நோயாளியின் மனநிலை அறிந்து அவனுக்கு இதமான வார்த்தைகள் கூறி அவனுக்கு நம்பிக்கை ஊட்ட வேண்டும். அப்போது நோயாளி மருத்துவரிடம் நம்பிக்கை கொண்டு அவர் கொடுக்கும் மருந்துகளைச் சாப்பிடுவான். இதைக் கண்ணாடிக் கூஜாவையும் இலையுதிர்ந்த மரத்தையும் காட்டிக் கேள்வி கேட்டீர்கள். கண்ணாடிக் கூஜாவும் இலையுதிர்ந்த மரமும் நோயாளியைப் போல உள்ளவை. நோயாளி தான் பிழைப்பானா மாட்டானா எனத் தவித்துக் கொண்டிருப்பான். இலை உதிர்ந்த மரம் போல நம்பிக்கை இழந்து தனக்கு வாழ்வு கிடைக்குமா என்று ஏங்கிக் கிடப்பான். அப்படிப்பட்ட நோயாளிக்கு நம்பிக்கை ஊட்டி அவன் முன்போல வாழ முடியும் என்பதை விளக்கவே இவற்றைக் காட்டிக் கேள்விகள் கேட்டீர்கள்" என்றான்.

அது கேட்டு சந்திரசேனர் புன்னகை புரிந்து "சரி. நோயாளிகளிடம் பேச மருத்துவருக்கு பொறுமை வேண்டுமல்லவா?" எனவே சங்கரனும் "ஆமாம். அது பற்றித்தான் நீங்கள் முதலிலேயே பரீட்சித்து விட்டீர்களே. எங்களை காலையிலேயே வரச் சொல்லி வெகு நேரம் காக்க வைத்து நாங்கள் பொறுமையுடன் இருக்கிறோமா என்று பார்த்தீர்களே" என்று சிரித்தவாறே கூறினான்.

சந்திரசேனர் திருப்தியுடன் ஜமீன்தாரரைப் பார்க்கவே அவரும் நீலகண்டய்யா இருந்த பதவிக்கு சங்கரனை நியமிப்பதாக அப்போதே அறிவித்தார்.






இடும்பி தன்னை மனைவியாக ஏற்கும்படி பீமனிடம் கோரினாள். பீமனோ "இது எப்படி நடக்கும்? உன்னை மணக்க என் இந்த சகோதரர்களை எல்லாம் உன் அண்ணனுக்கு பலி கொடுக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

இடும்பியோ "உங்களுக்கோ உங்கள் சகோதரர்களுக்கோ அல்லது உங்கள் தாயாருக்கோ என் சகோதரனால் எவ்வித ஆபத்தும் நேராமல் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றாள். பீமனோ "இவர்கள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். இவர்களது தூக்கத்தைக் கலைக்க நான் விரும்பவில்லை. உன் அண்ணனைப் பற்றிய பயம் எனக்கு இல்லை. எவனாலும் என்னை வெல்ல முடியாது. தெரிந்ததா" என்றான்.

இதற்குள் இடும்பன் தன் தங்கை திரும்பி வர ஏன் தாமதமாகிறது என எண்ணியவாறே பாண்டவர்கள் இருந்த இடத்திற்கு வந்தான். தன் அண்ணன் கோபத்தோடு வருவதைக் கண்ட இடும்பி பீமனிடம் "அதோ! என் அண்ணன் மலைப்போல வந்து கொண்டிருச்கிறான். அவன் இங்கு வருவதற்குள் உங்களை எல்லாம் வெகு தூரத்தில் கொண்டு போய் விட்டு விடுகிறேன்" என்றாள்.

பீமனோ "கவலைப்படாதே. இவனென்ன, எமனே வந்தாலும் என்னை ஒன்றும் செய்ய முடியாது. இவனோடு எவ்வளவு பேர் வந்தாலும் என்ன ஆவார்கள் என்பதை நீயே பார்" என்றான் சிரித்தவாறே.



யும் கொல்கிறேன் பார்" என்றான் கண்களை உருட்டியவாறே.

பீமனோ "அடே! இறக்கப் போவது யார் என்பது சற்று நேரத்தில் முடிவாகி விடும்". எனவே இடும்பன் மலைபோல் பீமன் மீது விழுந்து தாக்க முயன்றான். ஆனால் பீமன் அவனைகெட்டியாகப் பிடித்து கொஞ்ச தூரம் இழுத்துக் கொண்டு போய் அடிக்கலானான்.

இடும்பன் மெதுவாகத் தன்னை விடுவித்துக் கொண்டு பீமனைத் தாக்கலானான். பீமனோ மறுபடியும் பிடித்து அவனைப் இழுத்துக் கொண்டு கொஞ்ச தூரம் போனான். அப்போதுதான் இடும்பனுக்கு எவ்வளவு பலம் பீமனுக்கு என்பது புரிந்தது. அவனும் எதிர்த் தாக்குதலை ஆரம்பித்தான். இருவரும் கடும் போர் புரிந்தனர்.

அச்சண்டையில் நிலம் அதிர்ந்து மரங்கள் வேகமாக ஆடின. பாண்டவர்கள் நால்வரும் குந்தி தேவியும் கண் விழித்து என்ன நடக்கிறது என்று பார்க்கலாயினர். தன் எதிரே அழகிய பெண் ஒருத்தி நிற்பது கண்டு குந்திதேவி "யாரம்மா நீ? இங்கே எப்படி வந்தாய்" என்று கேட்டாள். இடும்பியும் குந்தி தேவியிடம் நடந்ததை விவரமாகக் கூறினாள். அவள் "நானும் என் அண்ணனும் ராட்சஸ குலத்தில் பிறந்தவர்கள். இந்தக் காட்டில் வசித்து வருகிறோம். உங்களை

இதற்குள் இடும்பன் அவர்களருகே வந்துவிட்டான். தன் தங்கை அணிந்திருந்த அழகிய பட்டாடைகளையும் நகைகளையும் கண்டும் அவள் அழகிய பெண்ணாக மாறி இருப்பதும் பார்த்துக் கோபம் கொண்டான்.

அவன் "என்ன வேஷம் இது! நான் பசியால் துடித்துக் கொண்டிருக்கிறேன். நீயோ சிங்காரித்துக் கொண்டு குலுக்கி மினிக்கி யாரை மயக்குகிறாய்? நாம் இராட்சஸர்கள் என்பதை மறந்து விட்டாயா? இந்த மனிதனை விரும்பி மணந்து கொண்டு எனக்கு துரோகம் புரிய நினைக்கிறாயா? இவர்களைக் கொன்று விழுங்குவதோடு உன்னை

எல்லாம் கொன்று விழுங்க வேண்டுமென்று அவன் என்னிடம் கூறி உங்களை எல்லாம் அழைத்து வரச் சொன்னான். ஆனால் உங்களது அந்த மகனின் அழகைக் கண்டு மயங்கி என் அண்ணன் கூறியதைச் செய்ய முடியாமல் போனேன். என் ஆசையை உங்கள் மகனிடமும் தெரிவித்துவிட்டேன். இதற்குள் என் அண்ணன் வந்துவிடவே உங்கள் மகன் அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெகு தூரம் போய் விட்டார். அங்கு அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள்.

இடும்பி சொன்னதைக் கேட்டு தருமர் தன் மற்ற சகோதரர்களுடன் பீமன் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்றார். பீமனும் இடும்பனும் சண்டை போட்டுக் கொண்டிருப்பதை அவர்கள் சற்று தூரத்தில் நின்று பார்க்கலானார்கள்.

பீமன் ஆவேசத்துடன் பாய்ந்து இடும்பனைத் தூக்கி 'கிர்' 'கிர்'ரென்று சுற்றித் தரை மீது ஓங்கி அடித்தான். இடும்பனின் எலும்புகள் பட்பட் என முறிந்தன. அவன் 'ஆ'வென அலறியவாறே இறந்து போனான். பீமனை குந்தி தேவியும் அவனது மற்ற சகோதரர்களும் பாராட்டினார்கள். அர்ஜுனனும் "வெகு தூரத்தில் ஒரு கிராமம் இருப்பது தெரிகிறது. நாம் விரைவில் அங்கு போய் விடலாம்" என்றான்.

குந்தி தேவியும் பாண்டவர்களும்





காரணத்திற்காக நீ இவளைக் கொல்லவா போகிறாய்? இது மிகப் பெரிய தவறாகும்" என்றார்.

இடும்பி தருமரின் கால்களிலும் குந்தி தேவியின் கால்களிலும் விழுந்து "நான் உங்கள் மகன் மீது கொண்ட ஆசையால் எங்கள் ராட்சஸ தர்மத்தை மீறி உங்கள் மகனையே என் கணவராக மனதால் வரித்து விட்டேன். அவர் மட்டும் என்னைப் புறக்கணித்தால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன். எனவே நான் சாகாதிருக்க வழி செய்யுங்கள். உங்களுக்கு எந்த ஆபத்தும் வராமலிருக்க உங்களை வெகு தூரத்தில் கொண்டு போய் விட்டு வருகிறேன்" என்றாள்.

வெகு வேகமாக நடக்கலானார்கள். இடும்பியும் அவர்களின் பின்னாலேயே சென்றாள். அப்போது பீமன் "உன் அண்ணனை நான் கொன்றதற்காக நீ என் மீதும் மற்றவர்கள் மீதும் வஞ்சம் தீர்த்துக் கொள்ள நினைக்கிறாயா? பேசாமல் போய் விடு. இல்லாவிட்டால் உன்னையும் உன் அண்ணன் போன இடத்திற்கே அனுப்பிவிடுவேன்" என்றான்.

தருமரோ "பீமா! பெண்ணென்றும் பாராமல் இவளைக் கொல்லப் போவதாகக் கூறுகிறாயே. இவளால் நம்மை ஒன்றும் செய்ய முடியாது என்பது உனக்கே தெரியும். இடும்பனை நீ கொன்றது என்னவோ சரி தான். அவனது தங்கை என்ற

தருமரும் அவளிடம் "இடும்பி! நீ சொல்வதை நம்புகிறேன். பீமன் உன்னை மணந்து கொள்வான். பகல் வேளைகளில் அவன் உன்னோடு இருப்பான். இரவு வேளைகளில் எம்மிடம் வந்து சேர்வான்" என்றார். இடும்பியும் அதற்கு சம்மதித்தாள். பீமனும் அவளுக்கு ஒரு குழந்தை பிறக்கும் வரை அவ்வாறு நடப்பதாகக் கூறினான்.

இடும்பி பீமனைத் தூக்கிக் கொண்டு ஆகாய வழியே சென்றாள். இருவரும் மலைகளின் மீதும் அழகிய பள்ளத்தாக்குகளிலும் திரிந்து சுகமாகக் காலம் கழித்தார்கள். கொஞ்ச காலமானதும் இடும்பி ஒரு மகனைப் பெற்றாள். அவன் பிறந்ததுமே மிக



உயரமாகத் தன் தாய் தநதையரை வணங்கி நின்றான்.

அவனது தலையில் ஒரு முடி கூட இருக்கவில்லை. தலை ஒரு பானையைப் போல இருந்தது. அது கண்டு அவள் ஆச்சரியப்பட்டாள். அவனுக்கு கடோத்கசன் என்ற பெய ரையும் வைத்தாள்.

கடோத்கசனும் தன் பெற்றோரை வணங்கி "உங்களுக்கு என்னால் ஏதாவது ஆக வேண்டுமானால் என்னை நினையுங்கள். உடனே உங்கள் முன் வந்து நிற்பேன்" எனக் கூறி வடதிசையில் சென்று விட்டான். இடும்பியும் முன் வாக்களித்தபடி பீமனை விட்டுப் பிரிவதாகக் கூறி அவனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றாள்.

இதன் பிறகு பாண்டவர்கள் பிரம்ம சாரிகளாக எளிய உடைகளை அணிந்து மத்ஸம், திரிகர்த்தம், பாஞ் சாலம் ஆகிய நாடுகளில் திரிந்தவாறே சென்று கொண்டிருந்தார்கள். ஓரிடத் தில் அவர்கள் வியாச முனி வரைச் சந்தித்தார்கள்.

அவர்கள் வியாசரைப் பணிவுடன் வணங்கி நின்றார்கள். அவர்களைக் கண்டு வியாசரும் "நீங்களும் சரி, திருதராஷ்டிரனின் புதல்வர்களும் சரி யாவரும் எனக்கு சமமே. ஆனால் அவர்கள் உங்களுக்கு அநீதியை இழைத்திருக்கிறார்கள். நீங்கள் கவலைப்பட வேண்டாம். இங்கிருந்து சற்று தூரத்தில் ஏகசக்கிரம் என்ற நகரம் உள்ளது. அது மிக அழகா னது. வசிப்பதற்கு ஏற்றது அங்க உடல் ஆரோக்கியமாக இருக்கும். நீங்கள் யாருக்கும் தெரியாமல் அங் கேயே கொஞ்ச காலம் இருங்கள்" என்றார்.

பாண்டவர்களும் அவரது அறி வுரையை ஏற்று நடப்பதாகக் கூறவே வியாசரே அவர்களை அழைத்துக் கொண்டு ஏக சக்கிர நகருக்குச் சென்றார். அங்கு அவர்களை ஒரு பிராம்மணர் வீட்டில் தங்கச் செய்தார். பிறகு குந்தி தேவியிடம் அவர் "அம்மா! நீங்கள் இங்கு ஒரு மாத காலம் தங்கி இருங்கள். அதற் குப் பிறகு நான் வந்த உங்களை எல்லாம் பார்க்கிறேன்" என்று கூறி

விட்டுச் சென்றார்.

குந்தியும் பாண்டவர்களும் அந்தப் பிராம்மணரின் வீட்டில் இருந்து யாவருடனும் சகஜமாகப் பழகினார்கள். தினமும் பாண்டவர்கள் 'பிக்ஷை'க்குப் போய் கிடைத்த தானியத்தைக் குந்தி தேவியிடம் கொடுத்தார்கள். அவள் அதில் பாதியை பீமனுக்குக் கொடுத்து விட்டு மீதமுள்ளதைப் பங்கிட்டுத் தானும் மற்ற பாண்டவர்களும் உண்ணக் கொடுத்து வந்தாள்.

விருந்தினர் யாராவது வந்தாலும் குந்தி அந்த 'பிக்ஷை'யிலிருந்தே ஒரு பகுதியை அவர்களுக்கும் கொடுத்து வந்தாள். பாண்டவர் 'பிக்ஷை' வாங்கி வந்ததோடு வேதங்களை நன்கு பயின்று வந்தார்கள். இவ்வாறாக அவர்களது நாட்கள் சுகமாகக் கழிந்து வரலாயின. ஒரு நாள் பாண்டவர்களில் தருமர், அர்ஜுனன், நகுலன், சகாதேவன் ஆகியோர் 'பிக்ஷை' வாங்கி வர ஊருக்குள் சென்று விட்டனர். வீட்டில் குந்திதேவியும் பீமனும் மட்டுமே இருந்தனர்.

அப்போது அந்த பிராம்மணரின் வீட்டில் அழுகைக் குரல் கேட்கவே குந்தி பீமனிடம் "பாவம்! இந்த வீட்டிலுள்ளவர்களுக்கு ஏதோ பெரிய சங்கடம் ஏற்பட்டிருக்கிறது போல் தெரிகிறது. இவர்கள் நமக்கு இடம் கொடுத்து உதவி இருக்கிறார்கள். எனவே அவர்களுக்கு என்ன கஷ்டம் என்று தெரிந்து வருகிறேன். அவர்களுக்கு நம்மால் முடிந்த உதவியையும் செய்யலாம்" எனக் கூறி அந்த பிராம்மண குடும்பத்தவரைக் கண்டு பேசுவதற்காகச் சென்றாள்.

பிராம்மணனும், அவன் மனைவியும், மகனும், மகளும் ஓரிடத்தில் உட்கார்ந்து அழுது கொண்டிருப்பதைக் குந்தி தேவி கண்டாள். அவள் அவர்களிடம் "என்ன நடந்தது? ஏன் இப்படி நீங்கள் எல்லோரும் அழுது கொண்டிருக்கிறீர்கள்" என்று கேட்டவாறே அவர்களருகில் போய் அமர்ந்து கொண்டாள்.



# வயதை அறிந்த விதம்

பண்ணையார் துரைசாமிக்கு மாடு மேய்க்க ஒரு ஆள் தேவைப்பட்டது. அவர் தம் ஊர் மணியகாரரிடம் "ஒரு நல்ல ஆளாக இருந்தால் என் மாடுகளை மேய்ப்பதற்காக அனுப்புங்கள். அவன் வெயில், மழை என்று பாராமல் ஓடியாடி உழைக்கும் வாலிபனாக இருக்க வேண்டும். அவனுக்கு இருபது வயதிற்கு மேல் இருக்கக் கூடாது" என்றார். மணியகாரரும் அப்படிப்பட்டவனைப் பார்த்து அனுப்புவதாகக் கூறிவிட்டுச் சென்றார்.

மறுநாள் மணியகாரர் அனுப்பியதாகக் கூறிக் கொண்டு பண்ணையாரைக் காண ஒருவன் வந்தான். பண்ணையாரும் அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு "நீ ஒல்லியாக இருக்கிறாயே. வயது கூட அதிகம் இருக்கும் போலிருக்கிறதே. உன்னால் ஓடியாடி மாடுகளைப் பார்த்துக் கொள்ள முடியுமா?" என்று கேட்டார்.

அவனும் "எனக்கு இருபது வயது தான். எங்கள் வீட்டில் எல்லோருமே ஒல்லி தான். என்னால் இந்த வேலையைத் திறன்பட செய்ய முடியும்" என்றான்.

பண்ணையாரும் "சரி, இன்றிரவு என் வீட்டுக் கொல்லையிலுள்ள கொட்டகையில் படுத்துக் கொள். அங்கு உப்பு மூட்டைகள் உள்ளன. எலிகள் வந்து உப்பைத் தின்று விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்றார்.

அவனோ ஆச்சரியத்தோடு "என் இந்த நாற்பது வயது காலத்தில் எலிகள் உப்பைத் தின்னும் என்று முதல் தடவையாகக் கேட்கிறேன்" என்றான்.



# இலுப்பை மரம்

கரடிக்குத் தேன் மிகவும் பிடிக்கும் என்பது யாவரும் அறிந்ததே. வட இந்தியக் கரடிகள் இலுப்பைப் பூவை மிகவும் விரும்பித் தின்கின்றன. வட இந்தியக் காடுகளில் இலுப்பை மரங்களை ஏராளமாகக் காணலாம். வட இந்திய பழங்குடி மக்கள் தமக்கு உண்ண அரிசி கிடைக்காதபோது இலுப்பைப் பூவை உணவாகக் கொள்கிறார்கள். இவர்கள் மாலை வேளையில் மரத்தடியைச் சுத்தமாகப் பெருக்கி வைத்து மறுநாள் காலை உதிரும் இலுப்பைப் பூக்களைச் சேகரித்து வைத்துக் கொள்கிறார்கள்.

இளம் மஞ்சள் நிறத்திலுள்ள இந்தப் பூக்களைக் காய வைத்து பத்திரப்படுத்தி தேவைப்படும்போது பழங்குடி மக்கள் உண்கிறார்கள். முன் காலத்தில் இந்தப் பழங்குடி மக்களை தண்டிக்க சில மராட்டிய மன்னர்கள் காடுகளிலிருந்த இலுப்பை மரங்களை வெட்டித் தள்ளியதும் உண்டாம்.

கம்பீரமாகத் தோற்றம் அளிக்கும் இலுப்பை மரங்கள் 20 மீட்டர் உயரம் வரை வளர்கின்றன. கிளைகளின் நுனியில் இவற்றின் இலைகள் முட்டை வடிவில் இருக்கும். பூக்களும் கொம்புகளின் நுனிகளில்தான் இருக்கும். முட்டை வடிவிலுள்ள இதன் பழங்கள் இலைப் பச்சை நிறத்தில் இருக்கும். இது உறுதியான மரம். இவற்றின் பழங்களும் பூக்களும் மிக அதிக விலைக்குப் போவதால், மரச் சாமான்கள் செய்ய இம்மரங்களை வெட்டுவது இல்லை.

இலுப்பை விதைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் சோப்பு தயாரிக்கவும் மருந்துகளின் உற்பத்தியிலும் பயன்படுத்தப்படுகிறது. இலுப்பைப் பூவையும், இம் மரத்தின் பட்டையையும், இம்மரத்தின் கோந்து போன்ற திரவத்தையும் மருந்துகள் தயாரிக்க உபயோகிக்கிறார்கள்.



நம்நாட்டு ரிஷி முனிவர்கள்-2

# விசுவாமித்திரர்

விசுவாமித்திரர் நாட்டைத் துறந்து தவம் செய்த போதிலும் வசிஷ்டர் பால் கொண்ட வெறுப்பை அவரால் ஒதுக்க முடியவில்லை. இதுதான் விசுவாமித்திரரின் பெரும் குறை. முடிவில் அவர் அக்குறையையும் போக்கிக் கொண்டு வசிஷ்டர் வாயாலேயே தம்மை பிரம்மரிஷி என அழைக்க வைத்தார்.

சத்தியவிரதன் என்ற அரசகுமாரன் கெட்ட வழிகளில் சென்றதால் அவனை அவனது தந்தை நாட்டை விட்டுத் துரத்தி விட்டார். அவன் விசுவாமித்திரர் தவம் செய்து கொண்டிருந்த காட்டிற்குச் சென்றான். விசுவாமித்திரர் அப்போது அங்கே இல்லை. அவரது மனைவி மக்களே அங்கே இருந்தனர். அப்போது சத்தியவிரதன் விசுவாமித்திரரின் மனைவி மக்களுக்கு உணவைக் கொடுத்து அவர்களைக் காப்பாற்றினான்.

ஒருநாள் அவனுக்கு உண்ண எதுவுமே கிடைக்காததால் அவன் வசிஷ்ட முனிவரின் ஆசிரமத்திலுள்ள ஒரு மிருகத்தைப் பிடித்துக் கொன்று அதன் மாமிசத்தைத் தானும் உண்டு விசுவாமித்திரரின் குடும்பத்தினருக்கும் கொடுத்தான். அது தெரிந்த வசிஷ்டர் கோபம் கொண்டு அவனைச் சபித்தார்.

தன் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்த விசுவாமித்திரர் சத்தியவிரதன் தன் குடும்பத்திற்கு செய்த உதவியை அறிந்து அவனுக்கு நன்றி செலுத்தினார். சத்தியவிரதனின் தந்தையும் அவனை மன்னித்து நாட்டிற்குத் திரும்பி வரும்படி அழைத்தார். தந்தை இறந்த பின் சத்தியவிரதன் நாட்டின் மன்னனானான். அவனுக்கு தன் உடலோடு சொர்க்கத்திற்குப் போக வேண்டும் என்ற ஆசை பிறந்தது. அதற்கான யாகத்தைச் செய்யும்படி அவன் வசிஷ்டரை வேண்டினான். ஆனால் வசிஷ்டரோ அதற்கான யாகம் எதுவும் இல்லை என்றும் யாரும் பூத உடலோடு சொர்க்கம் போக முடியாது என்றும் கூறினார். சத்தியவிரதனோ அவரோடு கடும் வாக்குவாதம் செய்யவே, அவர் கோபம் கொண்டு அவன் திரிசங்குவாக - அதாவது மூன்று பாவங்கள் புரிந்தவனாகப் போகக் கடவது என்று சபித்து விட்டார்.

திரிசங்கு விசுவாமித்திரரை அணுகித் தன் விருப்பத்தை நிறைவேற்றி வைக்குமாறு வேண்டினான். வசிஷ்டரை விடத் தான் மேலானவர் என நிரூபிக்கத் தனக்கு ஒரு வாய்ப்பு கிடைத்ததென விசுவாமித்திரர் மகிழ்ந்தார். அவர் ஒரு யாகத்தைச் செய்து திரிசங்குவை சொர்க்கத்தின் வாசல் வரை அனுப்பி விட்டார். தேவர்களோ அவனை உள்ளே வரவிடாமல் கீழே தள்ளி விட்டார்கள். ஆனால் விசுவாமித்திரர் அவனை அந்தரத்தில் நிறுத்தி தன் தவ வலிமையால் அங்கேயே

இன்னொரு சொர்க்கத்தை சிருஷ்டித்தார். அதுதான் திரிசங்கு சொர்க்கம் எனப் பெயர் பெற்றது. தவ வலிமையால் எதையும் செய்ய முடியும் எனச் செய்து காட்டியவர் விசுவாமித்திரர்.

விசுவாமித்திரரின் தவத்தைக் கலைக்க இந்திரன் மேனகை என்ற அப்ஸரப் பெண்ணை பூவுலகிற்கு அனுப்பினான். அவளுக்கும் விசுவாமித்திரருக்கும் பிறந்தவள் சகுந்தலை. பரதன் சகுந்தலையின் மகன். அவன் ஆண்ட நாடு பரதக் கண்டம் எனப் பெயரும் பெற்றது.

விசுவாமித்திரர் உண்மையே பேசும் அரிச்சந்திர மன்னனுக்குப் பல தொல்லைகளைக் கொடுத்து ஒரு பொய் சொல்லி விடும்படிக் கேட்டார். அரிச்சந்திரன் மறுக்க, அதனால் அவனை நாட்டை இழக்க வைத்து, மனைவியை விற்கும் நிலைக்கு தள்ளி, அவனை மயானத்தைக் காக்கும் வெட்டியானாக அவர் ஆக்கினார். அவன் மனைவி இறந்த மகனைச் சுடுகாட்டிற்குக் கொண்டு வந்தபோது அதற்குக் காப்புப் பணம் கொடுத்தாலே அனுமதிக்க முடியும் என அரிச்சந்திரன் கூறிவிட்டான். அரிச்சந்திரனின் உறுதியைக் கண்டு தேவர்கள் அவனுக்கு நாடும் மனைவி மக்களும் மீண்டும் கிடைக்க அருள் புரிந்தார்கள்.

இப்படி அரிச்சந்திரன் பெயரை உலகெங்கும் தெரிய வைத்த பெருமையும் விசுவாமித்திரரையே சாரும்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. நம் நாட்டில் அக்கா தங்கைகள் எனப்படும் மாநிலங்கள் யாவை?
2. டைனமோவைக் கண்டுபிடித்தவர் யார்?
3. கவாஸ்கர் முதல்தர கிரிக்கெட் ஆட்டத்திலிருந்து எப்போது விலகிக் கொண்டார்?
4. ஆப்பிரிக்காக் கண்டத்தில் மிகப் பெரிய நகரம் எது?
5. நம் நாட்டில் துளு மொழி எங்கு பேசப்படுகிறது?
6. மாவீரர்களாகப் பெயர் பெற்ற 'சமூரை' இன வீரர்கள் எந்நாட்டைச் சேர்ந்தவர்கள்?
7. நம் நாட்டில் வெளியாகும் மிகப் பழைய வாரப் பத்திரிகை எது?
8. உலகிலேயே மிகப் பெரிய மணி எது?
9. மௌரிய வம்சத்தை நிறுவியவர் யார்?
10. டூனீஸியாவின் பழங்காலப் பெயர் என்ன?
11. அகமதாபாத் எந்த நதிக் கரை மீது அமைந்துள்ளது?
12. இலங்கையை அடைய ராமர் கட்டிய சேது அணையின் இன்றைய பெயர் என்ன?
13. உலகில் மிகப் பெரிய வளைகுடா எது?
14. உத்கல் எனப்படும் பகுதியின் தற்போதையப் பெயர் என்ன?
15. 'டெஸ்ட் மேட்ச்'சில் கலந்து கொண்ட முதலாவது இந்தியர் யார்?
16. தொலைக் காட்சியைக் கண்டுபிடித்தவர் யார்?

## விடைகள்

1. அருணாசலப் பிரதேசம், அஸ்ஸாம், மணிப்பூர், மேகாலயா, மிஜோரம், நாகாலாந்து, திரிபுரா.
2. மைகேல் ஃபாரடே.
3. 1987 நவம்பரில்.
4. எகிப்தின் தலைநகரான கெய்ரோ.
5. தென் கர்நாடகத்தில்.
6. ஜப்பான்.
7. பாம்பே சமாசார்.
8. மாஸ்கோவிலுள்ள 'தி க்ரேட் பெல்'.
9. சந்திரகுப்த மௌரியர்.
10. கார்த்தேஜ்.
11. சபர்மதி.
12. ஆடம்ஸ் ப்ரிட்ஜ்.
13. வங்காள விரிகுடா.
14. ஒரிஸ்ஸா.
15. கே.எஸ். ரஞ்சித் சிங்.
16. ஜான்லாக் பாயர்ட்.



# சுகுமாரனின் கேள்விகள்

மா னகிரி மன்னன் மாதவ சேனன் இலக்கியத்தில் பற்று மிக்கவன். தன் தர்பாரில் கவிஞர் களுக்கு இடமளித்து ஆதரித்து வந்தான். சிறந்த கவிஞர் யாரா னாலும் அவரை அவன் பாராட்டத் தவறியது இல்லை.

ஒருமுறை அவன் பண்டிதர் களின் சிறப்புக் கூட்டம் ஒன்றைக் கூட்டினான். அதில் பேச்சுப் போட்டி இலக்கிய வாத விவாதம் எல்லாம் நடைபெற்றது. அவற்றில் யாவற்றிலும் தன் தர்பாரில் இருந்த பண்டிதர்களே வெற்றி பெற்றுக் கொண்டே வந்தது கண்டு மன்னன் பெருமிதம் கொண்டான். அவர் களது வெற்றிக்குப் பரிசுகள் அளித்ததோடு யாவருக்கும் பொதுவாக ஒரு மணியை தர் பாரில் கட்டி "நம் பண்டிதர்களைத் தோற்கடிக்க விரும்புபவர் இந்த மணியை அடித்து நம் பண்டிதர் களுடன் வாதம் புரிந்து வென்றால் அவருக்கு இந்த மணியையும் லட்சம் வராகன்களையும் பரிசாக அளிப்பேன்" என்று அறிவித் தான்.

இதைக் கேள்விப்பட்ட ரத்னா கரர் என்ற பண்டிதர் அண்டை நாட்டிலிருந்து மாதவசேனனின் தர்பாருக்கு வந்தார். அவர் மா பெரும் பண்டிதர். பல மொழிகள் கற்றவர். அவருடன் தர்பாரிலுள்ள பண்டிதர்கள் இரண்டு நாட்கள் வாதம் புரிந்தும் வெற்றி தோல்வி நிர்ணயிக்கப்பட முடியாமல் போயிற்று.

மூன்றாவது நாளிலும் வாத விவாதம் நடந்து முடிந்தது. நான் காவது நாளில் ரத்னாகரர் வெற்றி பெற்றதாக அறிவிக்கப் பட்டது.

தான் அறிவித்தபடி மாதவ

-எஸ். சோபினி-

சேனன் ரத்னாகரரை கௌர வித்து அந்த மணியையும் லட்சம் வராகன்களையும் பரிசாக அளித் தான். அவற்றை வாங்கிக் கொண்டு ரத்னாகரர் பல்லக்கில் ஏறி அமர்ந்து மானகிரியிலிருந்து கிளம்பினார். நகரின் எல்லையில் சுகுமாரன் என்றும் மாடு மேய்க்கும் இளைஞன் அவரை வழி மறித்து நிறுத்தினான்.

அவன் இலக்கிய ரசிகன். தன் நாட்டு தர்பாரிலுள்ள பண்டி தர்களை மிகவும் மதிப்பவன். அவர்கள் ரத்னாகரரிடம் தோற்றது அவனுக்கு மிகுந்த வேதனையை அளித்தது. அவன் ரத்னாகரரிடம் "ஐயா! எங்கள் நாட்டின் கௌரவச் சின்னமாக விளங்கும் இந்த மணியை நீங்கள் இங்கிருந்த எடுத்துச் செல்லவிட மாட்டேன்" என்றான்.

ரத்னாகரர் ஒருமுறை அவனை ஏற இறங்கப் பார்த்து ஏளனமாகச் சிரித்தார். அதனால் கோபம் கொண்ட சுகுமாரன் "ஐயா பண்டி தரே சிரிக்காதீர் நான் சாதாரண மாடு மேய்ப்பவன்தான். நான் மூன்று கேள்விகள் கேட்பேன். அவற்றில் ஏதாவது ஒன்றிற்குக் கூட நீர் சரியான பதில் கூறாமல் போனாலும் இந்த மணியை இங்கேயே வைத்து விட்டுப் போய்விட வேண்டும். இரண்டு கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாவிட்டால் நீர் பெற்ற பரிசுப் பணத்தையும் இங்கேயே வைத்து



விட வேண்டும். மூன்று கேள்விகளுக்குமே பதில் தெரியாவிட்டால் நீங்கள் பல்லக்கை விட்டு இறங்கி அதில் இந்த மணியை வைத்து சுமந்து கொண்டு போய் நீரே இதை எம் மன்னரிடம் ஒப்படைக்க வேண்டும். இதற்குச் சம்மதிக்கிறீர்களா?" என்று கேட்டான்.

ரத்னாகருரும் 'சரி' எனவே சுகுமாரன் "தெரிந்தால் தான் சொல்லக்கூடியதும் சொன்னால் தெரியக் கூடியதும் யோசித்துப் பார்த்தால் தெரியக் கூடியதும் எது? இதுதான் என் முதல் கேள்வி" என்றான். ரத்னாகரரோ சிரித்தவாறே "ஒரு மனிதன் பெயர்" என்றார்.

சுகுமாரனோ "தவறு அது விடுகதை. மனிதனின் பெயரைத் தெரிந்தால் சொல்லிவிடலாம் சொன்னால் தெரிந்து விடும். அதில் யோசிக்க என்ன இருக்கிறது? விடுகதை இம் மூன்றிலும் அடங்குவது" என்றான். ரத்னாகரர் திகைத்துப் போய் ஒப்பத்தப்படி மணியை எடுத்து அவன் பக்கம் வைத்தார்.

சுகுமாரன் தன் அடுத்த கேள்வியாக "ஒரு மரம் அதற்கு இரண்டு கிளைகள். ஒவ்வொரு கிளையிலும் ஐந்து பேர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். இவர்கள் தலையை சிறிது வெட்டினாலும் ஒரு சொட்டு ரத்தம் கூட வெளி வராது. உயிரும் போகாது. இது என்ன?" என்று கேட்டான்.



ரத்னாகரர் மிகவும் யோசித்து வேதாந்த தத்துவங்களில் சில வற்றை அலசிப் பார்த்து ஏதேதோ பதில்களைச் சொன்னார். சுகு மாரன் அவை எல்லாம் சரியான பதில்களல்ல என்று கூறவே முடி வில் அவர் அவனையே அதன் விடையைச் சொல்லச் சொன்னார். அவனும் "மரம் என்றால் மனிதன். இரு கிளைகள் என்றால் அவனது இரு கைகள். ஒரு கிளையில் ஐந்து பேர்கள் என்றால் ஒரு கையிலுள்ள ஐந்து விரல்கள். விரல்களின் தலையில் கொஞ்சம் வெட்டுதல் என்றால் நகத்தை வெட்டுதல் என்பது. அதை வெட்டினால் ரத்தம் வராதே" என்றான்.

மூன்றாவது கேள்வி என்ன என்று ரத்னாகரர் கேட்கவே "பரந்த பாஞ்சால நாட்டை தீரசிம்மன் முதல் வீரசிம்மன் வரை வம்ச பரம்பரையாக சிம்ம வம்சத் தவர் ஆண்டு வந்தனர். வீர சிம்மன் இறந்தான். அப்படி யானால் அதற்கு முன் யார் மன்னன்?" என்று கேட்டான்.

"பூ இதுதானா? வீரசிம்மனின் தந்தை கஜசிம்மன்" என்று ரத்னாகரர் கூறவே சுகுமாரன் "தவறு. நான் கேட்டதை கவனி யுங்கள். வீரசிம்மன் இறந்தான். அதற்குமுன் என்றால் அவன் இறந்ததற்கு முன் என்று அர்த்தம். அந்த இறப்பிற்கு முன் மன்னனாக இருந்தவன் வீரசிம்மனே" என்றான்.

ரத்னாகரர் தான் முற்றிலும் தோற்றதாக ஒப்புக் கொண்டு ஒப்பந்தப்படி மணியைப் பல்லக்கில் வைத்து சுமந்து கொண்டு போய் மன்னன் மாதவ சேனனிடம் ஒப்படைத்தார். அவர் நடந்ததையெல்லாம் கூறவே மன்னன் மகிழ்ந்து சுகுமாரனை தன் தர்பாருக்கு அழைத்து வரச் சொல்லி பாராட்டிப் பரிசளித்து தன் தர்பாரிலேயே ஒரு நல்ல உத்தியோகத்தையும் கொடுத்தான்.






# கிழவியின் கேள்வி

குப்பம்மாளின் குடிசை பணக்காரன் பரந்தாமனின் மாளிகையருகே இருந்தது. பரந்தாமன் அந்தக் கிழவியின் குடிசையைத் தனதாக்கிக் கொண்டு தன் வீட்டை விரிவாக்கத் தீர்மானித்தான்.

அவன் குப்பம்மாளை அழைத்து "பார் கிழவி! உன் குடிசை என் வீட்டருகே இருப்பதால் பார்க்க அசிங்கமாக இருக்கிறது அதனால் உன் குடிசையை எனக்கு விற்றுவிடு" என்றான்.

குப்பம்மாள் அதற்கு இணங்கவில்லை. தானும் தன் முன்னோர்களும் வாழ்ந்த குடிசையை விட்டுப் போக முடியாது எனக் கூறினாள். பரந்தாமனோ "கிழவி! நீ அதை எனக்கு விற்று விடு" என்று மறுபடியும் சொன்னான்.

குப்பம்மாளோ "எனக்கு இருப்பது இந்த ஒரே குடிசை. இதை விற்றுவிட்டால் நானும் என் பேரனும் எங்கே போவோம்? இது என் கணவர், மகன், மருமகள் என்று எல்லோரும் வாழ்ந்த இடம். இது என் உயிருக்குச் சமம். இதை நான் விற்க மாட்டேன்" என்றாள்.

பரந்தாமன் அதற்கு நல்ல விலை கொடுப்பதால் ஆசை காட்டிப்பார் பார்த்தான். கிழவி சம்மதிக்காமல் போகவே பணக்காரன் "இதோ பார். நீ நாளைக்குள் இந்தக் குடிசையை விட்டுப் போய்விட வேண்டும். இல்லாவிட்டால் நாளை என் ஆட்கள் வந்து குடிசையிலுள்ள சாமான்களை எல்லாம் வெளியே தூக்கி எறிந்து உன்னையும் அடித்துத் துரத்தி விடுவார்கள்" என்ற எச்சரித்தான்.

கிழவியோ "உன் மிரட்டலுக்கு எல்லாம் பணிய மாட்டேன். நான் இதைவிட்டுப் போக மாட்டேன். நீ மட்டும் அடாத செயல் செய்தால்

-ரம்யா குரு மூர்த்தி-

ஊரில் எல்லோரிடமும் சொல்லி நியாயம் கேட்பேன்" என்றாள்.

மறுநாள் குப்பம்மாள் குடிசையைக் காலி செய்யாததால் பரந்தாமனின் ஆட்கள் அவள் குடிசைக்குள் நுழைந்து அங்கிருந்த சாமான்களை எல்லாம் வெளியே தூக்கி எறிந்து விட்டு அவளையும் அவளது பேரனையும் அங்கிருந்து துரத்தி விட்டார்கள்.

குப்பம்மாள் அந்த அநியாயத்தை ஊரிலுள்ள பெரிய மனிதர்களிடம் கூறினாள். அவர்களும் அவளுக்கு ஆறுதலாகச் சில வார்த்தைகள் கூறி "கவலைப்படாதே. உன் வழக்கை ஊர்ப் பஞ்சாயத்தின் முன் வைத்து விசாரிப்போம்" என்றனர். பஞ்சாயத்துக் கூட்டி பரந்தாமனை விசாரித்தனர். அவனும் "இந்தக் கிழவியின் மகன் என்னிடம் ஐநூறு ரூபாய் கடன் வாங்கி இருந்தான். அதற்கு அவன் வட்டியும் செலுத்தவில்லை. முதலையும் திருப்பிக் கொடுக்கவில்லை. வருடம் ஐந்தாகி விட்டது. என் பணம் எனக்குக் கிடைக்கவில்லை. இந்தக் கிழவி மட்டும் எங்கே பணம் கொடுக்கப் போகிறாள்? அதற்காகத்தான் அந்தக் குடிசையை வசப்படுத்திக் கொண்டேன்" எனறு கூறி ஒரு பத்திரத்தைக் காட்டினான்.

அது அவன் தயாரித்த பொய்ப் பத்திரம். பஞ்சாயத்தார் அதை உண்மை என நம்பிப் பரந்தாமனுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்கள். குப்பம்மாள் என்ன செய்வாள்!



ஊர் ஓரமாக உள்ள ஒரு இடத்தில் குடிசை போட்டுக் கொண்டு தன் பேரனோடு இருக்கலானாள்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பின் பரந்தாமன் தான் ஆக்கிரமித்த கிழவியின் நிலத்தில் கட்டடம் கட்ட அஸ்திவாரம் போடத் தோண்டலானான். அப்போது குப்பம்மாள் ஒரு கூடையை எடுத்துக் கொண்டு தன் பேரனோடு அந்த இடத்திற்கு வந்தாள்.

அவளைக் கண்ட பரந்தாமன் "என்ன கிழவி! தகராறு செய்யவா வந்திருக்கிறாய்?" என்று கேட்டான். குப்பம்மாளும் "இல்லையப்பா! இந்த இடத்தை நீ தோண்டுகிறாய். இதிலிருந்து ஒரு கூடை மண்ணை நீ உன் கையால் எடுத்துக் கொடுத்தால் நான் அதைக் கொண்டு போய் விடுவேன்" என்றாள்.

பரந்தாமனும் "பூ! இவ்வளவு தானா? கொடு கூடையை இப்படி. அது நிறைய மண்ணை நிரப்பித் தூக்கிக் கொடுக்கிறேன்" என்று கூறி அவளிடமிருந்து கூடையை வாங்கிக் கொண்டான்.

அவன் கூடையில் மண்ணை நிரப்பி அதைத் தூக்க முயன்றான். அவனால் தூக்க முடியவில்லை. அதைக் கண்ட குப்பம்மாள் "இந்த ஒரு கூடை மண்ணை உன்னால் சுமக்க முடியவில்லையே. எப்படித் தான் என் குடிசை மண் பூராவையும் நீ சுமக்கப் போகிறாயோ?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

பரந்தாமன் அது கேட்டு தான் செய்தது அநியாயம் என்று உணர்ந்து வெட்கித் தலை குனிந்து கொண்டான் அவன் குப்பம்மாளிடம் "நான் செய்தது சரி இல்லைதான். உன் இடத்தில் நீயே இரு. நானே உனக்கு இங்கேயே ஒரு சிறு வீடு கட்டிக் கொடுக்கிறேன்" என்று கூறினான். அதன்படி அவள் குடிசை இருந்த இடத்திலேயே ஒரு வீட்டைக் கட்டிக் கொடுத்து அவளும் அவள் பேரனும் சுகமாக வாழவும் வழி செய்து கொடுத்தான்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்**



Taji Prasad



Taji Prasad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ மே 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026**

---

## மார்ச் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **அடுக்க அடுக்க ஆர்வம் வரும்**
இரண்டாவது போட்டோ : **படிக்கப் படிக்க பாடம் வரும்**
பரிசு பெற்றவர் : **தங்க. குஞ்சிதபாதம், சிதம்பரம்**



Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

---

